# குருபரம்பரையிலுள்ள தனியன்க

## ஸ்ரீமதநந்தாழ்வான் விஷயமானவை

(1) அகிலாத்மகுணவாஸம் அஞ்ஞான திமிராபஹம் ।
ஆச்ரிதாநாம் ஸுசரணம் வந்தே அநந்தார்ய தேசிகம் ॥
(2) ஸ்ரீமத் ராமாநுஜாசார்ய ஸ்ரீபாதாம்போருஹத்வயம் ।
ஸதுத்தமாங்க ஸந்தார்யம் அநந்தார்ய குரும் பஜே ॥
(3) யதீந்த்ர பாதாம்புஜ சஞ்சரீகம்
ஸ்ரீமத் தயாபால தயைக பாத்ரம் ।
ஸ்ரீவேங்கடேசாங்க்ரி யுகாந்தரங்கம்
நமாம்யநந்தார்யமநந்தக்ருத்வ: ॥

---

## சித்திரை மாதத்தில் சித்திரை திருநக்ஷத்திரம்

# ஸ்ரீ அநந்தாழ்வான் வாழித் திருநாம

விண்ணவர்கள் வந்து தொழும் வேங்கடமால் அடி
யிணையைத் திண்ணமிதுவென்று தெளிவுற்று—நண்ணிக்
காலமலர் பரித்திட்டுக்கண்டுகக்கும் அனந்தாழ்வான்
கோலமலர் அடியிணையே கூறு.

---

அருமறைகள் தேடறிய அணிவேங்கடமால்
திருவிருக்கும் மார்பில் திருமாலை-ஒருமையுடன்
தேடிஅளித்தருளும் சீர்அனந்தாழ்வானைப்
பாடி அடிதொழுவோம் யாம்.

---

மலையில் வேங்கடவற்கு மாமனார் வாழியே
மணிச்சுடர்கோன் அனந்தனென வந்துதித்தோன் வாழியே
உலகுக்கோர் தஞ்சமென உதித்தருள்வோன் வாழியே
உலகமுண்டமாலடியை உகந்துய்ந்தோன் வாழியே
இலகு சித்திரையில் சித்திரையோன் வாழியே
எந்தை எதிராசர் இணையடியோன் வாழியே
அலர்மேல் மங்கை திருவுக்கு அப்பனார் வாழியே
அனந்தாழ்வான் திருவடிகள் அனவரதம் வாழியே.

---

### ஸ்ரீமதனந்தாழ்வான் மங்களம்

ஸ்ரீவேங்கடாத்ரி கமிது:
கைங்கர்யேஷு ந்யயுங்த யம் ।
ராமாநுஜார்யஸ் தஸ்மை ஸ்யாத்
அனந்தார்யாய மங்களம் ॥

ஸ்ரீ. சே. நெ-110
கா ஸ்ரீ ரோடு - பழிவங்கம்.



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீசைலானந்தார்ய மஹாகுரவே நம:

# திருவாராதனச் சுருக்கம்.



[வித்வான் திருமலை அனந்தாண் பிள்ளை
கபிஸ்தலம் கிருஷ்ணமாச்சாரியஸ்வாமி எழுதியது]

கிடைக்குமிடம் :

**ஸ்ரீ. உ. வே. திருமலை அநந்தாண் பிள்ளை**
கபிஸ்தலம் அநந்தாசார்யஸ்வாமி திருமாளிகை,
156, வடக்குச் சித்திரை வீதி,
ஸ்ரீரங்கம். (திருச்சி ஜில்லா)

## ஸ்ரீமதநந்தாழ்வான் வைபவம்.

**ஸ்ரீ பின்பழகிய பெருமாள்ஜீயர் அருளிய**

### ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தில் உள்ளது.

அநந்தரம் அநந்தாழ்வான் இராமாநுசப் புத்தேரி கட்டி வைக்கும்போது மண் சுமவா நிற்க, பிள்ளைகளிலே யொருவர் சென்று கூடையை வாங்கப்புக, ''நான் அத்தை விடில் இளைப்பன்; நீ இத்தைத் தொடில் இளைப்புதி'' என்றருளிச் செய்ய, 'இளைப்பாகாது' என்று பிள்ளை பின்னையும் கூடையை வாங்கப்புக, 'ஆகில் நான் ஜீவிக்கிற ஜீவநத்தை வாங்கவேணுமோ? நீயும் வேணுமாகில் ஒரு கூடையை வாங்கிக் கொண்டு சுமக்கமாட்டாயோ?' என்றருளினார்.

பின்னையும் ஒருநாள் கர்ப்பவதியான தம் தேவிகள் மேலே மண்சுமத்தா நிற்க. இது கண்டு திருவேங்கடமுடையான் ஒரு பிள்ளையாய் எதிரே வந்து வாங்கிக் கொண்டுபோக, தேவிகள் கடுகவருமது கண்டு, 'இதுவென்? கடுக வருகிறாய்' என்ன? அவளும், 'ஒரு பிள்ளை எதிரே வந்து கூடையை வாங்கிக்கொண்டு போகிறான்' என்று சொல்ல, கேட்டு உடனே சென்று கண்டு, கைங்கர்ய விக்நகாரீ! நீ கூடையைத்தொடாதேகொள்! என்று கொட்டெடுத்து அடிக்கப்புக, திருவேங்கடச் செல்வன் ஓடிச்சென்று கோயிலிலே புகுந்தான் என்பர்கள்.

அநந்தாழ்வான் திருநந்தவனத்திலே திருப்படித் தாமமெடா நிற்க திருக்கையிலே போகி (பாம்பு) ஸந்தஷ்டமாக, பின்னையும் போய் நீராடிக் கைங்கர்யத்திலேபோர, ஸ்ரீபாதத்துக்குப் பரிவராயிருப்பார், விஷந்தீர்க்கப் பார்க்க வேண்டாவோ? என்ன, வேண்டா என்று அத்தை

சி. கோ.
ஸ்ரீரங்கம்



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீசைலாநந்தார்ய மஹாகுரவே நம:

# திருவாராதனச் சுருக்கம்.

—※—

## திருக்காப்பு நீக்குதல்.

எம்பெருமான்களுடைய ஸந்நிதி முன்பே சென்று தெண்டன் ஸமர்ப்பிக்க வேண்டியது.

பெருமாள் ஸந்நிதியில் தெண்டன் ஸமர்ப்பித்து வாக்கிய குருபரம்பரையை அநுஸந்திப்பது.

**வாக்கிய குருபரம்பரையாவது**

அஸ்மத் குருப்யோ நம:
அஸ்மத் பரமகுருப்யோ நம:
அஸ்மத்ஸர்வகுருப்யோ நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீபராங்குசதாஸாய நம:
ஸ்ரீமத்யாமுநமுநயே நம:
ஸ்ரீராமமிச்ராய நம:
ஸ்ரீபுண்டரீகாக்ஷாய நம:
ஸ்ரீமந்நாதமுநயே நம:
ஸ்ரீமதே சடகோபாய நம:
ஸ்ரீமதே விஷ்வக்ஸேநாய நம:
ஸ்ரீயை நம:
ஸ்ரீதராய நம: — என்பதாகும்.

### கூரத்தாழ்வானருளிச் செய்த சுலோக குருபரம்பரை

அஸ்மத்தேசிக மஸ்மதீய
பரமாசார்யா நசேஷாந் குரூந்.

ஸ்ரீமல்லக்ஷ்மண யோகிபுங்கவ
மஹாபூர்ணௌ முநிம் யாமுநம்,

ராமம் பத்மவிலோசநம் முநிவரம்
நாதம் சடத்வேஷிணம்

ஸேநேசம் ச்ரியமிந்திராஸஹசரம்
நாராயணம் ஸம்ச்ரயே.

### திருமந்த்ரம்

ஓம் நமோ நாராயணாய

### த்வயம்

ஸ்ரீமந்நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே,
ஸ்ரீமதே நாராயணாய நம:

### சரமச்லோகம்.

ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ,
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:

ஆசாரியன் தனியனை அநுஸந்திக்கவேண்டியது.

### த்யான சுலோகம் சொல்ல வேண்டியது.

கூர்மாதீந் திவ்யலோகாந் ததநு மணிமயம்
மண்டபம் தத்ர சேஷம்

தஸ்மிந் தர்மாதி பீடம் ததுபரி கமலம்
சாமரக்ராஹிணீச்ச,

விஷ்ணும் தேவீர் விபூஷாயுதகணமுரகம்
பாதுகே வைநதேயம்

ஸேநேசம் த்வாரபாலாந் குமுதமுககணாந்
விஷ்ணுபக்தாந் ப்ரபத்யே.



ஸவ்யம் பாதம் ப்ரஸார்ய ச்ரிததுரித ஹரம்
தக்ஷிணம் குஞ்சயித்வா

ஜாநுந்யாதாய ஸவ்யேதர மிதரபுஜம்
நாகபோகே நிதாய,

பச்சாத் பாஹுத்வயேந ப்ரதிபட சமநே
தாரயந் சங்க சக்ரே

தேவிபூஷாதி ஜுஷ்டோ விதரது ஜகதாம்
சர்ம வைகுண்ட நாத:

என்ற த்யான சுலோகத்தையும் அநுஸந்திக்கவும்.

2 பாத்யம். 3 ஆசமநீயம்.
6 5 சுத்தோதகம். 12
1 அர்க்யம். 4 ஸ்நானீயம்.
7
8 9 10 11

### சில விளக்கங்கள் (1)

1. அர்க்யம்—ஹஸ்தம் விளக்குகிறது.
2. பாத்யம்—திருவடிகள் விளக்குகிறது.
3. ஆசமநீயம்—தீர்த்தம் உட்கொள்ளுவது.
4. ஸ்நானீயம்—திருமஞ்ஜனம் செய்கிறது.
5. சுத்தோதகம்—பரிசுத்த தீர்த்தம்.
6. பெருமாள் முதலானவர்களுக்கு மந்த்ராவாஹநம் செய்து கொள்ளும் திருக்காவேரி தீர்த்தச் செம்பு.
7. ஆசார்யருக்கு மந்த்ராவாஹநம் செய்துகொள்ளும் இராமாநுஜ தீர்த்தச் செம்பு.
8. திருத்துழாய் புஷ்பத் தட்டு.
9. சாற்றுப்படி (சந்தனம்)
10. கர்ப்பூர ஹாரத்தி.
11. தூபக்கால்.
12. படிகம்.

## வட்டில்களில் தீர்த்தஞ் சேர்த்தல்

பெருமாளுக்கு வலது பக்கத்தில் இருந்து ஸ்வாசார்யனால் நியமிக்கப்பட்டவனாக எண்ணிக்கொள்வது.

"ந தர்மநிஷ்டோஸ்மி ந சாத்மவேதீ
ந பக்திமாந் த்வச் சரணாரவிந்தே,
அகிஞ்சநோ (அ) நந்யகதிச்சரண்ய!
த்வத்பாத மூலம் சரணம் ப்ரபத்யே".

என்றநுஸந்தித்து, பின்பு ஸந்நிதி பாத்ரங்களைச் சோதித்துப் பரிசுத்தமாய்க் கொண்டு வந்திருப்பதைப் பெருமாள் ஸந்நிதியில் மணையின் மீது அடியிற்கண்டிருக்கிறபடி திருக்காவேரி யென்கிற தீர்த்தச் செம்பையும், படிகத்தையும், ஒரு பாத்ர வேதிகையில்—அர்க்ய, பாத்ய, ஆசமநீய, ஸ்நாநீயங்களுக்காக வலது புறத்திலிருந்து ப்ரதக்ஷிணமாக நான்கு பக்கத்தில் நாலு வட்டில்களையும், நடுவே சுத்தோதக வட்டிலையும். எதிர்ப்புறத்தில் வேறு இரண்டு வட்டில்களையும் அமர்த்தி வட்டில்களுக்கு * சோஷண தாஹந ப்லாவநங்கள் செய்யவேண்டும்.

செம்பு தீர்த்தத்தில் திருத்துழாய் ஏலக்காய்ப்பொடி சாத்துப்படி இவைகளைச் சேர்த்து, © ஸுரபிமுத்ரையால் தொட்டுச் செம்பை வலக்கையினால் மூடிக்கொண்டு ஐந்து தரம் "ஸ்ரீமதே நாராயணாய நம:" என்ற உத்தர வாக்யத்தால் அபிமந்திரிக்கவும்.

---

** சோஷணதாஹந ப்லாவநங்கள் என்பது - வட்டில்களை வாயுவினால் உலர்த்தி, அக்நியினால் தஹிப்பித்து, ஜலத்தினால் சுத்தி செய்த பாவமாக அதற்குரிய - ஸ்ரீமதே நாராயணாய நம: என்னும் மந்த்ரத்தை உச்சரித்துக் கைகளால் ஸ்பரிசித்தல்.*

---

*© ஸுரபிமுத்ரை என்றால்—இரண்டு கைகளையும் மடக்கி, நடுவிரலையும் ஆள்காட்டி விரலையும் சேர்த்து, சுண்டு விரலையும், பவித்ர விரலையும் சேர்க்க, இப்படி இரண்டு விரல்கள் சேர்த்து ஒரு முலையாய் பசுவினது நான்கு முலைபோலக் காட்டும் முத்ரை.*



செம்பிலிருக்கும் தீர்த்தத்தாலும் திருத்துழாயாலும் * உத்தர வாக்கியத்தைக்கொண்டு அபிமந்திரித்த உத்தரணியில் ஷ்டி தீர்த்தங்கொண்டு ஷ்டி வாக்யத்தால் ஐந்து வட்டில்களையும் சோதித்துப் படிகத்தில் சேர்த்துவிட்டு, அந்தச் செம்பிலிருக்கும் தீர்த்தத்தை அர்க்ய வட்டில் தொடங்கி ப்ரதக்ஷிணமாக நாலு வட்டில்களிலும் நடுவட்டிலிலும் பூரித்து, திருத்துழாயும் ஏலக்காய்ப் பொடியும் சாற்றுப்படியுஞ்சேர்த்து ஐந்து வட்டில்களையும் ஒவ்வொன்றாக ஸுரபிமுத்ரை காட்டி, வலது கையினால் மூடி உத்தர வாக்யத்தால் ஐந்துதரம் அபிமந்திரிக்கவும்.

திருத்துழாய்த் தளத்தைப் பவித்ர விரலுக்கும் நடுவிரலுக்கும் மத்தியிலிடுக்கிக் கொண்டு, மத்திய வட்டில் தொடங்கி மூன்று வட்டில்களிலும் நடு வட்டிலிலும் கொஞ்சம் கொஞ்சமாக உத்தரணியால் தீர்த்தமெடுத்து அர்க்ய வட்டிலிற்சேர்த்து, அர்க்ய வட்டிலிலிருந்து உத்தரணியில் தீர்த்தமெடுத்து திருத்துழாயுடனே கையினால் மூடிக்கொண்டு முகத்துக்கு நேராகத் தூக்கி ஸ்ரீ விரஜை, திருக்காவேரி, ஸ்வாமி புஷ்கரிணி, அநந்தஸரஸ்ஸு, திருத்தாம்பிரபர்ணி, திருக்கல்யாணி முதலான நூற்றெட்டுத் திவ்யதேச தீர்த்தங்களென்று பாவித்து உத்தர வாக்யத்தால் ஐந்துதரம் அபிமந்திரித்து, அர்க்ய வட்டில் தவிர மற்றைய நாலு வட்டில்களிலும் செம்பிலும் கொஞ்சம் கொஞ்சமாய்ச் சேர்த்து மிச்சத்தை திருத்துழாயாலே பெருமாள் முதலியவர்கள், ஆசார்யன் திருவடிநிலை, ஸந்நிதி பரிகரங்கள் இவர்கள்மீதும் புரோக்ஷித்து மிகுந்த தீர்த்தத்தைப் படிகத்திற் சேர்த்து விடவும்.

---

** உத்தரவாக்கியம்—ஸ்ரீமதே நாராயணாய நம: என்பது.*

## தமது ஆசார்யனுக்கு திருவாராதனம் செய்வது

செம்பிலிருக்கும் தீர்த்தத்தை உத்தரணியாலெடுத்து
உத்தரவாக்யத்தால் வேருக இருக்கிற இரண்டு வட்டில்
களைச் சோதித்துப் படிகத்தில் சேர்த்துவிட்டு, ஷை செம்புத்
தீர்த்தத்தை அவ்விரண்டு வட்டில்களிலும் பூரித்து, திருத்
துழாயைச் சேர்த்து ஸுரபி முத்திரை காட்டி, ஒவ்வொரு
வட்டிலையும் வலது கையினுல் மூடிக்கொண்டு ஐந்துதரம்
உத்தர வாக்யத்தால் அபிமந்திரித்து, ஒரு வட்டிலில் உத்
தரணியால் தீர்த்தமெடுத்து, "அஸ்மத்குருப்யோ நம:"
"அர்க்யம் கண்டருளவேணும்" என்று அநுஸந்தித்துக்
கொண்டே ஆசார்யன் திருமுன்பு காட்டிப் படிகத்தில்
சேர்த்துவிட்டு, இரண்டாந்தரமும் மூன்ருந்தரமும் அப்
படியே அவ்வட்டில் தீர்த்தத்தையே உத்தரணியால்
எடுத்து ஆசார்யன் திருமுன்பு காட்டிப் படி
கத்திற் சேர்த்துவிட்டுவேறே வட்டிலிலிருக்கும் சுத்தோத
கத்தினுல் உத்தரணியைச்சோதித்துப் படிக்கத்தில்சேர்த்து
விட்டு அந்த அர்க்ய வட்டிலில் தானே உத்தரணியால்
தீர்த்தமெடுத்து "அஸ்மத்குருப்யோ நம:" "பாத்யம்
கண்டருளவேணும்" என்று முன்போலவே மும்மூன்று
தரம் ஆசார்யன் திருவடிகளுக்குக் காட்டிப் படிகத்தில்
சேர்த்துவிட்டு மறுபடியும் அவ்வட்டிலில்தானே உத்த
ரணியால் தீர்த்தமெடுத்து ஆசார்யன் திருக்கைகளை
விளக்கி அர்க்ய பாத்திரத்தினின்றும் மூன்றுதரம் * கண்டூ
ஷம் ஸமர்ப்பித்து உத்தரணியைச் சுத்தோதகத்தினுல்
சோதித்து மறுபடியும் அவ்வட்டிலில்தானே தீர்த்த
மெடுத்து "அஸ்மத்குருப்யோ நம:" "ஆசமநீயம்
கண்டருளவேணும்" என்று மூன்றுதரம் ஆசார்யன்
திருக்கைகள் வழியாய் திருப்பவளத்துக்குக்காட்டிப் படி
கத்திற் சேர்த்துவிட்டு, "அஸ்மத் குருப்யோ நம:" என்று

* கண்டூஷம்—வாய்க் கொப்பளித்தல்.



திருத்துழாய் அல்லது தளுவத்தினுல் திருஒற்ருடை
ஸமர்ப்பிக்கவும்.

ஸ்நாஞஸனத்தி லெழுந்தருளச்செய்ய "அஸ்மத்
குருப்யோ நம:" என்று திருத்துழாய் ஸமர்ப்பித்து,
அர்க்ய பாத்ய ஆசமநீய திரு ஒற்ருடை ஸமர்ப்பித்து ஒரு
திருத்துழாயாலே திரு நாவழித்து அர்க்ய பாத்திரத்தி
னின்று மூன்றுதரம் ஆசமநீயம் ஸமர்ப்பிக்கவும். சுருள
முது கண்டருளப்பண்ணி "வெண்ணெயளைந்த" என்னும்
பாசுரம் தொடங்கி பத்துப் பாசுரங்களையாவது அல்லது
ஆதியந்த பாசுரங்களையாவது ஸேவித்து, அந்த அர்க்ய
வட்டிலிலிருக்கும் தீர்த்தத்தைத் தானே உத்தரணியா
லெடுத்து "அஸ்மத் குருப்யோ நம:" "நீராட்டங்
கண்டருளவேணும்" என்று திருத்துழாய் தளத்தைக்
கொண்டு ஆசார்யனுக்குப் புரோக்ஷித்துத் திருமஞ்சனமும்,
திருஒற்ருடையும் ஸமர்ப்பிக்கவும்.

அலங்காராஸனத்தி லெழுந்தருளச்செய்ய "அஸ்மத்
குருப்யோ நம:" என்று திருத்துழாய் ஸமர்ப்பித்துத் திருப்
பரிவட்டமாகப் பாவித்து "அஸ்மத் குருப்யோ நம:" என்று
திருத்துழாயும்,

வகையால் மனமொன்றி மாதவனை—நாளும்
புகையால் விளக்கால் புதுமலரால் நீரால்
திசைதோறமரர்கள் சென்றிறைஞ்ச நின்ற
தகையான் சரணம் தமர்கட்கோர்பற்றே.

என்கிற பாசுரத்தால் "அஸ்மத் குருப்யோ நம:" என்று
தூபமும், * அர்க்யபாத்யாசமநீயமும், பிறகு திரு ஒற்ரு
டையும், கேசவாதி நாமங்களால் திருமண் காப்பாகத் திருத்
துழாயும்,

* அர்க்யபாத்யாசமநீயம், திரு ஒற்ருடை, திருமண்காப்பு,
சாற்றுப்படி, புஷ்பம், திருவாபரணம், தூபம், தீபம், கற்பூரம்
முதலியவை ஸமர்ப்பிக்கும் போதெல்லாம் அதற்குரிய பாசுரங்

“பூசும்சாந்தென்னெஞ்சமே புனையும்
கண்ணியெனதுடைய
வாசகம்செய்மாலையே வான்பட்டாடையுமஃதே
தேசமானவணிகலனும் என்கைகூப்புச்செய்கையே
ஈசன்ஞாலமுண்டுமிழ்ந்த எந்தைஏகமூர்த்திக்கே”

என்கிற பாசுரத்தால் சாற்றுப்படியும் புஷ்பமும் திருவாபரணமுமாக திருத்துழாயும்,

“பரிவதிலீசனைப்பாடி விரிவதுமேவலுறுவீர்
பிரிவகையின்றிநன்னீர்தூய்ப் புரிவதுவும்புகைபூவே”

என்கிற பாசுரத்தால் தூபமும்,

“வையம்தகளியா வார்கடலேநெய்யாக
வெய்யகதிரோன் விளக்காக—செய்ய
சுடராழியானடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவேயென்று”

என்கிற பாசுரத்தால் தீபமும், “பல்லாண்டு” என்கிற பாசுரத்தால் கற்பூரமும், பிறகு அர்க்யபாத்யாசமநீயமும், திருவொற்ருடையும்,

“சென்ருல்குடையாம் இருந்தால்சிங்காசனமாம்
நின்ருல்மரவடியாம் நீள்கடலுள் —என்றும்
புணையாமணிவிளக்காம் பூம்பட்டாம்புல்கு
மணையாம் திருமாற்கரவு”

என்கிற பாசுரத்தால் மந்திர புஷ்பமாகத் திருத்துழாயும் ஸமர்ப்பிக்கவும்.

---

*களோடே கூட “அஸ்மத் குருப்யோ நம:” என்று ஸ்வாசார்யனுக்கும், “பராங்குச பரகால யதிவராதிப்யோ நம:” என்று ஆழ்வாராசார்யர்களுக்கும், “ஸர்வமங்கள விக்ரஹாய ஸமஸ்த பரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம:” என்று பெருமாள், பிராட்டியார், அநந்த கருட விஷ்வக்ஸேந ஸுதர்சந பாஞ்சஜந்யம் முதலானோர்களுக்கும், முதலிற் காட்டியபடியே அந்தந்த பாசுரங்களோடே கூட அவரவர்களுக்குரிய வாக்கியங்களை யநுஸந்தித்து அவரவர்களுக்கு உசிதமானபடி திருவாராதனம் ஸமர்ப்பிக்கவேண்டும்.*



## ஆழ்வாராசார்யர்களுக்குத் திருவாராதனம் ஸமர்ப்பித்தல்

ஆசார்யன் ஹஸ்தத்தால் திருவாராதனம் ஸமர்ப்பிக்கிறதாகப் பாவித்து, ஸ்வாசார்யனுக்கு ஸமர்ப்பித்த இரண்டு வட்டில்களிலுள்ள தீர்த்தத்தைப் படிகத்திற் சேர்த்துவிட்டு, செம்பிலிருக்கும் தீர்த்தத்தினாலேயே முன்போல் வட்டில்களைச் சோதித்துத் தீர்த்தம் பூரித்து ஸ்வாசார்யனுக்கு ஸமர்ப்பித்தபடியே “அஸ்மத் குருப்யோ நம:” என்னும் வாக்கியத்திற்குப் பதிலாக மாத்திரம் “பராங்குச பரகால யதிவராதிப்யோ நம:” என்று அநுஸந்தித்து ஆழ்வாராசார்யர்களுக்குத் திருவாராதனம் ஸமர்ப்பிக்கவேண்டும்.

## பெருமாள், பிராட்டியார், அநந்த கருட விஷ்வக்ஸேந ஸுதர்சந பாஞ்சஜந்யம் முதலானோர்களுக்குத் திருவாராதனம் ஸமர்ப்பித்தல்.

ஆசார்யன் ஹஸ்தத்தால் திருவாராதனம் ஸமர்ப்பிக்கிறதாகப் பாவித்து, ஐந்து வட்டில்களுள் அர்க்ய வட்டிலிலிருக்கும் தீர்த்தத்தை உத்தரணியிற் கொண்டு ‘ஸர்வமங்கள விக்ரஹாய ஸமஸ்த பரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம:” என்று மூன்று தரம் அர்க்யம் ஸமர்ப்பித்து, நடுவட்டிலிலிருக்கும்சுத்தோதகத்தினால் உத்தரணியைச் சோதித்துப் படிகத்திற் சேர்த்துவிட்டு மறுபடியும் அர்க்ய பாத்திரத்தில் தீர்த்தமெடுத்துத் திருத்துழாய் கொண்டு எம்பெருமான் திருக்கைகளை விளக்கி அந்தப் பாத்திரத்தினின்றுமே மூன்றுதரம் கண்டூஷம் ஸமர்ப்பித்து உத்தரணியைச் சுத்தோதகத்தால் சோதித்து ஆசமநீய வட்டிலிலிருக்கும் தீர்த்தத்தினால் மூன்றுதரம் ஆசமநீயம் ஸமர்ப்பித்து, சுத்தோதகத்தினால் உத்தரணியைச் சோதித்துப் படிகத்தில் சேர்த்துவிட்டுத் திரு ஒற்ருடை ஸமர்ப்பிக்க

வும். பிறகு ஸ்நானாஸனத்தி லெழுந்தருளச் செய்து அர்க்ய பாத்ய ஆசமநீயம் திரு ஒற்ருடை ஸமர்ப்பித்து ஒரு திருத்துழாயாலே திருமுத்து விளக்கி யருளப்பண்ணி மற்றொரு திருத்துழாயாலே திருநாவழித்து அர்க்ய பாத்திரத்தினின்றும் மூன்றுதரம் அர்க்யம் ஸமர்ப்பித்துப் பாத்ய ஆசமநீயம் ஸமர்ப்பிக்கவும். சுருளமுது கண்டருளப்பண்ணி ஸ்நான பாத்திரத்தினின்று (வெண்ணெயளைந்த குணுங்காலே) திருமஞ்சனமும் பிறகு திரு ஒற்ருடையும் ஸமர்ப்பித்து, அலங்காராஸனத்திலெழுந்தருளச் செய்து முன்போலவே திருப்பரிவட்டமும், தூபமும், அர்க்யபாத்யாசமநீயமும், திரு ஒற்ருடையும், திருமண் காப்பு, சாற்றுப்படி, புஷ்பம், திருவாபரணம், தூபம், தீபம், கர்பூரம், அர்க்யபாத்யாசமநீயம், திரு ஒற்ருடை, மந்த்ர புஷ்பம் முதலியவையும் ஸமர்ப்பித்து எம்பெருமானே ஸகல அபசாரங்களையும் பொறுத்தருளி, ஸமஸ்தோபசாரங்களையும் திருவுள்ளம்பற்றி யருளவேண்டுமென்று திருவடிகளில் திருத்துழாய் ஸமர்ப்பிக்கவும்.

---

## தனியன்கள்

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம் |
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்ய ஜாமாதரம் முநிம் ||

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம் |
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தே குருபரம்பராம் ||

யோ நித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாய மேநே |
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ
ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே ||



மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதிஸ்
ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம் |
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா ||

பூதம் ஸரஸ்ச மஹதாஹ்வய பட்டநாத
ஸ்ரீபக்திஸார குலசேகர யோகிவாஹாந் |
பக்தாங்க்ரிரேணு பரகால யதீந்த்ரமிச்ராந்
ஸ்ரீமத் பராங்குசமுநிம் ப்ரணதோஸ்மி நித்யம் ||

என்று தொடங்கி திருப்பல்லாண்டு, திருப்பாவை, கண்ணிநுண் சிறுத்தாம்பு, இராமாநுஜ நூற்றந்தாதி முதலியவைகளை சௌகர்யம்போல் சேவிக்கலாம்.

### ப்ரஸாதங் கண்டருளப் பண்ணுதல்.

போஜ்யாஸனத்தி லெழுந்தருளச் செய்ய "ஸர்வமங்கள விக்ரஹாய ஸமஸ்த பரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம:" என்று திருத்துழாய் ஸமர்ப்பித்து, ஐந்து வட்டில்களிலிருக்கும் தீர்த்தத்தைக் கொண்டு ஷெ வாக்கியங்களினால் அர்க்யபாத்யாசமநீயமும், திரு ஒற்ருடையும் ஸமர்ப்பித்து, அர்க்ய வட்டிலிலிருக்கும் தீர்த்தத்தை உத்தரணியினாலெடுத்துத் திருத்துழாய்த் தளத்தைக் கொண்டு உத்தர வாக்கியத்தால் புரோக்ஷித்து ஸ்தலசுத்தி செய்யவும்.

தளிகை ஸமர்ப்பித்து, அர்க்ய வட்டிலிலிருந்து உத்தரணியால் தீர்த்தத்தை யெடுத்து உத்தர வாக்யத்தால் திருத்துழாய் தளத்தைக் கொண்டு ஷெ தளிகை முதலியவற்றை ப்ரோக்ஷித்துத் திருத்துழாயையுஞ் சேர்த்து, ஸுரபிமுத்ரை காட்டி, பிரஸாதத்தின் பேரில் வாமஹஸ்த ஸஹிதமாக வலது கையை வைத்துக்கொண்டு உத்தர வாக்கியத்தால் அபிமந்திரித்து எம்பெருமான்கள் திருக்கைகளைத் தீர்த்தத்தினால் விளக்கி உத்தரணியால் தீர்த்தத்தையெடுத்து உத்தர வாக்கியம் அநுஸந்தித்து இரண்டுதரம் ப்ரதக்ஷிணமாகத் தளிகையைச் சுற்றி,

நாறுநறும்பொழில் மாலிருஞ்சோலை நம்பிக்கு—நான்
நூறுதடாவில் வெண்ணெய் வாய்நேர்ந்து பராவி
வைத்தேன்
நூறுதடா நிறைந்த வக்காரவடிசில் சொன்னேன்
ஏறுதிருவுடையா னின்று வந்திவை கொள்ளும்கொலோ.

"கூடாரை வெல்லும்சீர்" என்கிற பாசுரங்களைச் சேவிக்கிற பரியந்தம் உத்தரணியுடனே கைகாட்டிக் கொண்டிருக்கவும். பாசுரங்களை ஸேவித்ததும் "ஸர்வமங்கள விக்ரஹாய ஸமஸ்த பரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம:" என்று பெருமாள் முதலானவர்களுக்கும் ப்ரஸாதமும் தீர்த்தமுங் கண்டருள்வித்து, அர்க்யபாத்யாசமநீயமும் திரு ஒற்றுடையும் ஸமர்ப்பிக்கவும்.

பின்பு "பராங்குச பரகால யதிவராதிப்யோ நம:" என்று போஜ்யாஸனத்தி லெழுந்தருளுவித்து, ஷி ஐந்து வட்டில்களிலுள்ள தீர்த்தத்தினாலேயே அர்க்யபாத்யாசமநீயம் ஸமர்ப்பித்து ஷி பாசுரங்களைச் சேவித்து "பராங்குச பரகால யதிவராதிப்யோ நம:" என்று நம்மாழ்வார் முதலிய பூர்வாசாரியர்களுக்கு அந்த பிரஸாதத்தையும் கண்டருளப்பண்ணி அர்க்யபாத்யாசமநீயமும் திருஒற்றுடையும் ஸமர்ப்பிக்கவும்.

"அஸ்மத் குருப்யோ நம:" என்று போஜ்யாஸனத்தி லெழுந்தருளுவித்து, ஷி ஐந்து வட்டில்களிலுள்ள தீர்த்தத்தினாலேயே அர்க்யபாத்யாசநீயம் ஸமர்ப்பித்து,

பச்சைமா மலைபோல் மேனி பவளவாய் கமலச்செங்கண்
அச்சுதா அமரரேறே ஆயர்தம் கொழுந்தேயென்னும்
இச்சுவை தவிர யான்போய் இந்திர லோகமாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமா நகருளானே

"அஸ்மத் குருப்யோ நம:" என்று ஸ்வாசார்யனுக்கு அந்தப் பிரஸாதமுந் தீர்த்தமுங் கண்டருள்வித்து அர்க்ய



பாத்யாசமநீயமும் திரு ஒற்றுடையும் ஸமர்ப்பித்துத் தளிகையை மாற்றிவிட்டு, "ஸ்ரீமதே நாராயணாய நம:" என்று ஸ்தலசுத்தி செய்யவும்.

## அடைக்காயமுது செய்வித்தல்.

* பர்யங்காஸனத்தி லெழுந்தருளச்செய்ய 'ஸர்வமங்கள விக்ரஹாய ஸமஸ்தபரிவாராய, ஸ்ரீமதே நாராயணாய நம:" என்று திருத்துழாய் ஸமர்ப்பித்துச் செம்பிலிருக்கும் தீர்த்தத்தை உத்தரணியா லெடுத்து ஷி வாக்கியங்களை யநுஸந்தித்து அர்க்யபாத்யாசமநீயமும் திரு ஒற்றுடையும் ஸமர்ப்பித்து, ஷி செம்பிலிருக்கும் தீர்த்தத்தை உத்தரணியா லெடுத்து உத்தரவாக்யத்தால் திருத்துழாய்த் தளத்தைக் கொண்டு அடைக்காயைப் புரோக்ஷித்துத் திருத்துழாய் சேர்த்து,

---

சில விளக்கங்கள் தொடர்ச்சி (2)

* (1) *ரத்நஸிம்ஹாஸநம் — திருவாராதனம் கண்டருள இங்கே ஸந்நிதானம் செய்தருளவேணுமென்று அழைப்பது.*

(2) *ஸ்நானாஸநம் — திருமஞ்சனம் கண்டருளவேணுமென்று அழைப்பது.*

(3) *அலங்காராஸநம் — அலங்காராஸநத்தில் எழுந்தருள வேணுமென்று அழைப்பது.*

(4) *புநர்மந்த்ராஸநம் — வேதவிண்ணப்பமும் ப்ரபந்தம் ஸேவித்தலும்.*

(5) *போஜ்யாஸநம் — ப்ரஸாதம் கண்டருளவேணுமென்று அழைப்பது.*

(6) *பர்யங்காஸநம்—சயனாஸநத்திற்கு எழுந்தருள வேணுமென்று பிரார்த்திப்பது.*

*என ஆஸநங்கள் ஆறு.*

"போய்ப்பாடுடைய நின்தந்தையும்
தாழ்த்தான் பொருதிறல்கஞ்சன் கடியன்
காப்பாருமில்லை கடல்வண்ணா
உன்னைத்தனியே போயெங்கும் திரிதி
பேய்ப்பால்முலையுண்ட பித்தனே
கேசவநம்பீ யுன்னைக்காதுகுத்த
ஆய்ப்பாலர் பெண்டுகளெல்லாரும் வந்தார்
அடைக்காய்திருத்தி நான் வைத்தேன்"

என்கிற பாசுரத்தையும், ஷி வாக்கியங்களையும் அநுஸந்தித்துப் பெருமாள் முதலானவர்களுக்கு அடைக்காயமுது செய்வித்து அர்க்யபாத்யாசமநீயமும் திரு ஒற்றுடையும் ஸமர்ப்பித்து, "பராங்குசபரகாலயதிவராதிப்யோ நம:" என்று பர்யங்காஸனத்தி லெழுந்தருள்வித்து நம்மாழ்வார் முதலிய பூர்வாசாரியர்களுக்குச் செம்பிலிருக்கும் தீர்த்தத்தினுல் அர்க்யபாத்யாசமநீயமும் திருஒற்றுடையும் ஸமர்ப்பித்து "அஸ்மத் குருப்யோ நம:"என்று பர்யங்காஸனத்தி லெழுந்தருள்வித்து ஸ்வாசார்யனுக்கு அந்தச் செம்பிலிருக்கும் தீர்த்தத்தினுலேயே அர்க்யபாத்யாசமநீயமும் திரு ஒற்றுடையும் ஸமர்ப்பித்து, அடைக்காயமுது செய்வித்துப் பின் அர்க்யபாத்யாசமநீயமும் திரு ஒற்றுடையும் ஸமர்ப்பித்துத் திருப்பல்லாண்டினுல் கற்பூரஹாரத்தி ஸமர்ப்பிக்கவும்.

ஆழ்வார்கள்வாழி அருளிச்செயல் வாழி
தாழ்வாதுமில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரும்
உய்ய அவர்களுரைத்தவைகள் தாம்வாழி
செய்யமறை தன்னுடனேசேர்ந்து.



## மங்களாசாஸனம்.

லக்ஷ்மீசரண லாக்ஷாங்க ஸாக்ஷாத் ஸ்ரீவத்ஸவக்ஷஸே
க்ஷேமங்கராய ஸர்வேஷாம் ஸ்ரீரங்கேசாய மங்களம்.

ஸ்ரீய:காந்தாய கல்யாண நிதயே நிதயேர்த்திநும்
ஸ்ரீவேங்கட நிவாஸாய ஸ்ரீநிவாஸாய மங்களம்.

அஸ்து ஸ்ரீஸ்தன கஸ்தூரீவாஸனு வாஸிதோரஸே
ஸ்ரீஹஸ்திகிரி நாதாய தேவராஜாய மங்களம்.

கமலாகுச கஸ்தூரீ கர்தமாங்கித வக்ஷஸே
யாதவாத்ரிநிவாஸாய ஸம்பத்புத்ராய மங்களம்:

அசேஷலோக வந்த்யாய குரவே சேஷமூர்த்தயே
ஸ்ரீமத் ராமாநுஜாயாஸ்து யதிராஜாய மங்களம்.

ஸ்ரீமதே ரம்யஜாமாத்ரு முநீந்த்ராய மஹாத்மநே
ஸ்ரீரங்கவாஸிநே பூயாத் நித்யஸ்ரீர் நித்ய மங்களம்.

மங்களாசாஸனபரைர் மதாசார்ய புரோகமை:
ஸர்வைச்ச பூர்வைராசார்யை: ஸத்க்ருதாயாஸ்து
[மங்களம்.

———

## சாற்று முறை

சிற்றஞ் சிறுகாலே, வங்கக்கடல், இருப்பிடம், இன்புற்ற, அங்கயல், பூமன்னு என்கிற பாசுரங்களை சேவித்துக்கொண்டே திருத்துழாயும் திருப்பல்லாண்டினுல் கற்பூர ஹாரத்தியும் ஸமர்ப்பித்து, "ஸர்வதேசதசாகாலேஷு" முதலிய வாக்யங்களையும் வாழித் திருநாமங்களையும் அஞ்சலிஹஸ்தனுய் நின்று அநுஸந்திக்கவும்.

———

## திருக்காப்புச் சேர்த்தல்

உறகலுறகலுறக லொண் சுடராழியே சங்கே
அறவெறி நாந்தகவாளே யழகிய சார்ங்கமே தண்டே
இறவு படாமலிருந்த வெண்மருலோக பாலீர்காள்
பறவையரையாவுறகல் பள்ளியறை குறிக்கொண்மின்.

என்ற பாசுரத்தை அநுஸந்தித்துத் திருத்துழாய் ஸமர்ப்பித்துச் சய்யாஸனத்தி லெழுந்தருளவென்று உத்தர வாக்கியத்தால் திருத்துழாய் ஸமர்ப்பித்துத் திருக்காப்பு சேர்த்துவிட்டு,

''உபசாராபதேசேந க்ருதாந் அஹரஹர் மயா
அபசாராந் இமாந் ஸர்வாந் க்ஷமஸ்வ புருஷோத்தம''

என்ற சுலோகத்தையும் அநுஸந்தித்துத் தண்டன் ஸமர்ப்பிக்கவும்.

ஜீயர் திருவடிகளே சரணம்
திருவாராதன க்ரமம் முற்றிற்று.



நிவர்த்திப்பித்தருளினூர். பின்பு கோயிலேற எழுந்தருளினவாறே திருவேங்கடமுடையான் திருவாய்மலர்ந்து, விஷந் தீர்க்க வேண்டாவென்று என்ன நினைத்துச் சொன்னீர்? என்று கேட்டருள, இவரும் 'கடியுண்ட பாம்பு வலிதாகில் திருக்கோனேரியிலே தீர்த்தமாடி திருவேங்கடமுடையானை சேவிக்கிறேன். கடித்த பாம்பு வலிதாகில் விரஜையிலே தீர்த்தமாடி ஸ்ரீ வைகுண்டநாதனைச் சேவிக்கிறேன் என்றிருந்தேன், என்று விண்ணப்பம் செய்தார்.

அநந்தாழ்வான் கோஸல ராஜ்யத்திற்கு எழுந்தருளுகிறபோது கட்டுத் திருப்போனகங் கட்டிக்கொண்டுபோய் அமுதுசெய்யப் புக்கவாறே பட்டையடங்கலும் சிற்றெறும்பாய்க்கிடக்க, அத்தைக்கண்டு, துணுக்கென்றுத் தம் முதலிகளைப் பார்த்து ''எம்பெருமான் பொன் மலைமேல் ஏதேனுமாவேனே'' என்னுமவர்களிலே சிலராய்த்து இவர்கள்; இப்படியே கொண்டுபோய்த் திருமலையிலே வைத்து வாருங்கோள் என்றருளிச் செய்தார்.

அநந்தாழ்வான் யமுனைத்துறைவனிலே திருமாலை கட்டாநிற்கத் திருவேங்கடமுடையான் அருள்பாடிடப் பேசாதேயிருந்து திருமாலை சேர்த்துக்கொண்டு உள்ளே புக்கவாறே, திருவேங்கடமுடையானும் '' நாம் அழைக்க அநந்தாழ்வான் நீர் வராததேன்?'' என்று திருவுள்ளமாக இவரும் கருமுகைமொட்டு வெடியா நிற்க எனக்கு தேவரீரைக் கொண்டு கார்யமென்? என்றுர். திருவேங்கடமுடையானும் ஆகில் நாம் உம்மை இங்கு நின்றும் போகச்சொன்னேமாகில், நீர் செய்வதென்? என்று திருவுள்ளமாக, இவநும் ''பரன் சென்று சேர் திருவேங்கடம்'' என்கிறபடியே தேவரீரன்றோ வந்தேறிகள்; இவ்விடம் தேவரீரை ஆச்ரயித்தவர்களதன்றோ? தேவரீர் ஒரு கிழமை முற்பட்டீரித்தனை; இருவரும் திருமலையாழ்வாரை ஆச்ரயித்தோமித்தனையன்றோ? என்று விண்ணப்பம் செய்தார்.

---

ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ வைஷ்ணவ நித்ய அநுஷ்டாந முறை

(திருச்சித்ரகூடம் Dr. A.V. ரங்காச்சாரியர் ஸ்வாமிகள்)

### 1. நித்திரையிலிருந்து விழித்தல்

சூரியன் உதிப்பதற்கு முன் படுக்கையை விட்டு எழுந்திருக்கும்போது ஆசாரியரின் திருவடிகளை த்யானித்துக் கொண்டும், அவருடைய தனியனை சொல்லிக் கொண்டும், கூப்பிய கரங்களுடன் நடந்து சென்று வாய் கொப்பளித்து, கை, கால்களையும் கண்களையும் கழுவிக்கொள்ள வேண்டும்.

பின்பு "ஸ்ரீ ஹரி:" என்ற நாமத்தை ஏழு தடவை சொல்லிக்கொண்டு, பெருமாள் சந்நிதியில் தண்டம் ஸமர்ப்பிக்க வேண்டும்.

### 2. பல் துலக்குதல்

பல் துலக்கும்போது, நின்று கொண்டோ, நடந்துகொண்டோ, துணியால் போர்த்திக் கொண்டோ துலக்கக் கூடாது. கிழக்கு முகமாகவோ, வடக்கு முகமாகவோ, உட்கார்ந்து கொண்டு பல் துலக்க வேண்டும். பற்களை உற்புறமும் வெளிப்புறமும் செவ்வையாகத் துலக்க வேண்டும். நாக்கை வழிக்க வேண்டும்.

ஜலத்தை வாயில் சேர்த்து, 14 தரம் செவ்வையாகக் கொப்பளித்து இடது புறத்தில் துப்ப வேண்டும்.

கைகளையும், கால்களையும் முகத்தையும் கழுவிக்கொண்டு, பின்பு உள்ளங்கையில் ஜலம் கொண்டு, ஓம் அச்சுதாய நம: ஓம் அநந்தாய நம:, ஓம் கோவிந்தாய நம: என்று சொல்லி 3 தடவை உட்கொள்ள வேண்டும்.

### 3. தீர்த்தமாடுதல்

கிழக்கு முகமாகவோ, வடக்கு முகமாகவோ நின்று கொண்டு ஸ்நானம் செய்ய வேண்டும். இடுப்பில் வஸ்திரத்துடன் ஸ்நானம் செய்ய வேண்டும். ஸ்நானம் செய்யும் தீர்த்தத்தை கொஞ்சம் கையில் எடுத்துக் கொண்டு.





ஸ்ரீ ஜெயகிருஷ்ணா பெஸ்டிசைட்ஸ்
(பி) லிமிடெட்

Mfrs : Superier Quality Agro Chemicals

29/8-B, வெள்ளக்கல்பட்டி, சேலம்-12. போன் : 2345027

"ஸ்ரீமத் பகவத் பாகவத ஆசாரிய ஸ்ரீபாத தீர்த்தம்" என்று அநுசந்தித்து, தலையில் புரோட்சித்துக் கொள்ள வேண்டும். பின்பு

இலைத்தலைச் சாந்துரந்து இலங்கை கட்டழித்தவன்
மலைத்தலைப் பிறந்திழந்து வந்து நுந்து சந்தனம்
குலைத்தலைத்திறுத் தெழித்த குங்குமக்குழம்பினோடு
அலைத் தொழுகு காவிரி அரங்கம் மேய அண்ணலே

என்ற பாசுரத்தைச் சொல்லி தீர்த்தமாட வேண்டும். பின்பு உலர்ந்த ஆடைகளை அணிந்துகொள்ள வேண்டும்.

**4. திருமண் காப்பு அணிதல்**

கையில் கொஞ்சம் தீர்த்தத்தை எடுத்து, "ஸ்ரீமதே நாராயணாய நம:" என்று சொல்லி இடத்தை சுத்தம் செய்ய வேண்டும்.

அந்த இடத்தில் திருமண் பெட்டியை உயர்ந்த ஆஸனத்தில் எழுந்தருளப் பண்ணி, தான் தாழ்ந்த சுத்தமான ஆஸனத்தில் கிழக்கு முகமாகவோ வடக்குமுகமாகவோ உட்கார வேண்டும்.

ஆசாரியரை த்யானித்துக்கொண்டு, மூன்று தரம் கையைத் தட்டி, திருமண் பெட்டியைத் திறக்க வேண்டும். சுத்தமான தீர்த்த பாத்திரத்தில், திருத்துழாயைச் சேர்த்து, வலது கையால் தீர்த்தத்தை மூடி "ஸ்ரீமதே நாராயணாய நம:" என்று சொல்ல வேண்டும்.

வெள்ளைத் திருமண் கதிரை வலக்கையால் எடுத்து, இடது உள்ளங்கையில் வைத்து, வலது உள்ளங்கையை அதற்கு மேலே வைத்து மூடிக்கொண்டு. "ஸ்ரீ பூதேவ்யை நம:" என்று அபிமந்திரித்து கையைப் பிரித்து, வலது கை ஆள் காட்டி விரலால் சிறிய பாத்திரத்தில் உள்ள தீர்த்தத்தைத் தொட்டு எடுத்து, இடது உள்ளங்கையில் சேர்த்து, திருமண் கதிரால் குழைக்க வேண்டும்.

ஆசாரிய த்யானத்துடன் மூக்கின்மேல் தாமரை மலர் போல் மேல் நோக்கி இழுக்க வேண்டும். (கீழ் நோக்கியும் இழுக்கிறார்கள். அவ்வாறு செய்யக்கூடாது)

பின்பு, புருவங்களுக்கு இடையில் கோடு இட்டு, அதன் மேல் வலப்பக்கமும் இடப் பக்கமுமாக திருமண் அணிய வேண்டும். இதுவே நெற்றியில் இடும் முதல் திருமண் ஆகும்.

SALEM PIPES
WHOLE SALE DEALERS FOR :
VISAFLEX ISI & ORIENT PVC PIPES, STAR PVC FITTINGS, G.I.PIPES AND ISI MARKED G.I. PIPE FITTINGS, G.M. GATE VALVES & C.P. FITTINGS INFRA WATER TANK & HDPE PIPES AND ALL PLUMBING MATERIALS
VISAFLEX®
RIGID PVC PIPES
Branches : Coimbatore
© 2236946, 2234150. Trichy © 2700746
83C, V Market Road, Salem-1.
© 2264300, 2264052, 2267051.
Fax : 91- 427 - 2267053



அதன்பின் சிரசைத் தவிர்ந்த மற்றைய 11 இடங்களில் (நான்கு பக்கமும் சமமான அளவில் (அ) சதுர வடிவில்) 'ப' வடிவத்தில் திருமண் அமைய வேண்டும்.

2-வது திருமண், நாபிக்கு மேலேயும், (அ) நடு வயிறு. 3-வது திருமண், மார்பிலும், 4-வது திருமண் கழுத்தின் முன்புறத்திலும் 5-வது திருமண் வலது வயிற்றிலும். 6-வது திருமண் வலது புஜத்தின் மேல் பாகமும், 7-வது திருமண் கழுத்துக்கு கீழே வலது தோளிலும், 8-வது திருமண் இடது வயிற்றிலும், 9-வது திருமண் இடது புஜத்தின் மேல் பாகத்திலும், 10-வது திருமண் கழுத்துக்கு கீழே இடது தோளிலும், 11-வது திருமண் அடிமுதுகிலும், 12-வது திருமண் பிடரிலும் அணிய வேண்டும்.

கையிலுள்ள எஞ்சிய திருமண்ணை தீர்த்தத்தில் கழுவிவிடக்கூடாது. அதை அனைத்தையும் சிந்தாமல் தலையின் மேல் தடவிக்கொள்ள வேண்டும்.

அதன் பின் ஸ்ரீ சூர்ணத்தை குழைத்து தீபச் சுடரைப்பேல் 12 இடங்களில் மேலே சொன்ன க்ரமத்தில் அணிய வேண்டும். எஞ்சிய ஸ்ரீசூர்ணத்தை தலையில் தடவிக்கொள்ள வேண்டும்.

பன்னிரண்டு திருமண் காப்பு அணிய அவகாசம் இல்லாதவர்கள், முதலும் கடைசியுமான, நெற்றிலும், பிடரியிலும் அணிந்தால் போதுமானது. பிடரியில் அணியும் போது 'ப' வடிவத்தில்தான் அணிய வேண்டும். (பிடரியில் திருமண்ணை மேலும் கீழும் இழுக்காமல் மேல் நோக்கியே இழுக்க வேண்டும்.)

**5. திருப்பவித்ர மாலைகள் அணிதல்**

நூற்றெட்டுத் திருப்பதிகள் நினைவாக 108 திருத்துழாய்மணிகள் கொண்ட மாலையை அணிய வேண்டும். 74 ஸிம்மாஸநாதிபதிகளின் பாவனையாக 74 தாமரைமணிகள் உள்ள தாமரைமணி மாலையையும் அணிய வேண்டும். பிறகு பவித்ர மாலை (பட்டு நூலினால் செய்ததை) அணிந்து கொள்ள வேண்டும்.

பிறகு, திவ்யதேச எம்பெருமான்களுடையதும், ஆழ்வார் ஆசார்யர்களதுமான சந்தன அபய ஹஸ்தம், திருவடிகள் ஆகியவற்றை கண், தோள், மார்பு, தலை ஆகிய இடங்களில் ஒற்றிக் கொண்டு, தீர்த்தவடிகளில் தீர்த்தத்தைச் சேர்த்து, ஸ்ரீபாத தீர்த்தமாக எண்ணி ஸ்வீகரிக்க வேண்டும்.



வள்ளி & கோ

313, திருச்சி மெயின் ரோடு,
சேலம் - 636 006. போன் : 2212956.
சாரதா காலேஜ் ரோடு (ராமகிருஷ்ணா ரோடு கட்டிங் அருகில்) சேலம்-7. Ph : 2311120
KURL-ON மற்றும் MM foom மெத்தை தலையணைகள், TIMEX WATCHES,
LG வீனைல் புளோரிங், ஸ்கிரீன் மற்றும் சோபா துணிகள் கிடைக்கும்.

தன்னாசாரியர் திருவடிநிலைகள் தந்திருந்தால் அதை சிரசில் வைத்துக்கொண்டு, அஞ்சலி கைகளோடு, ஆசாரியரை த்யானித்துக் கொண்டு. அவர் தனியனை அநுசந்தித்துக் கொண்டு, அவர் உபதேசித்த மந்திரங்களை அநுசந்தித்தல் வேண்டும்.

**6. மந்திரங்கள் அநுசந்தானம் செய்தல்**

கூப்பிய கரங்களுடன் கீழே உள்ள மந்திரங்களைச் சொல்லிக் கொண்டு, 12 இடங்களிலும் அஞ்சலி செலுத்தவேண்டும்.

| | திருமேனியில் அணிய வேண்டிய இடங்கள் | திருமண்ணுக்குரிய மந்த்ரம் | ஸ்ரீ சூர்ணத்துக்குரிய மந்த்ரம் |
|---|---|---|---|
| 1. | நெற்றி | ஓம் கேசவாய நம: | ஓம் ஸ்ரீதேவ்யை நம: |
| 2. | நாபிக்குமேல் | ஓம் நாராயணாய நம: | ஓம் அம்ருதோத் பவாயை நம: |
| 3. | மார்பு | ஓம் மாதவாய நம : | ஓம் கமலாய நம: |
| 4. | கழுத்தின் முன்புறம் | ஓம் கோவிந்தாய நம: | ஓம் சந்த்ர சோபின்யை நம: |
| 5. | வலது வயிறு புறம் | ஓம் விஷ்ணவே நம: | ஓம் விஷ்ணு பத்னியை நம: |
| 6. | வலது புஜம் | ஓம் மதுசூதனாய நம: | ஓம் வைஷ்ணவ்யை நம: |
| 7. | வலதுதோள் (கழுத்துக்குகீழ்) | ஓம் த்ரிவிக்ரமாய நம: | ஓம் வராரோஹிண்யை நம: |
| 8. | இடது வயிறு புறம் | ஓம் வாமனாய நம: | ஓம் ஹரி வல்லபாயை நம: |
| 9. | இடது புஜம் | ஓம் ஸ்ரீதராய நம: | ஓம் சார்ங்கிண்யை நம: |
| 10. | இடது தோள் (கழுத்துக்கீழ்) | ஓம் ஹ்ருஷீகேசாய நம: | ஓம் ஸ்ரீதேவதேவ்யை நம: |
| 11. | அடிமுதுகு புறம் | ஓம் பத்மநாபாய நம: | ஓம் ஸ்ரீமகாலக்ஷ்மியை நம: |
| 12. | பிடரி | ஓம் தாமோதராய நம: | ஓம் ஸர்வாங்க சுந்தர்யை நம: |

(தொடரும்....)

சுவை மிகுந்தது ; தரத்தில் சிறந்தது

காயத்ரி பிராண்டு, கோதுமை மாவு, மைதா, ரவை, ராகி மாவு, அரிசி மாவு, கடலை மாவு, சேமியா ஆகிய தரமான பொருட்களுக்கு

காயத்ரி பிராண்டு மட்டுமே !



ஸ்ரீ காயத்ரி ஸ்டோர்ஸ்

108-A, கன்னடியர் தெரு, சேலம் - 1.போன் : 2260781



ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ வைஷ்ணவ நித்ய அநுஷ்டாந முறை

**(திருச்சித்ரகூடம் Dr. A.V. ரங்காச்சாரியர் ஸ்வாமிகள்)**

கூப்பிய கரத்தை மார்புக்கு நேராக வைத்துக் கொண்டு கீழே உள்ள மந்திரங்களை அநுஸந்திக்கவும்.

**வாக்கிய குருபரம்பரை**

1. அஸ்மத் குருப்யோ நம :
2. அஸ்மத் பரம குருப்யோ நம :
3. அஸ்மத் ஸர்வ குருப்யோ நம :
4. ஸ்ரீமதே ராமாநுஜாய நம :
5. ஸ்ரீ பராங்குச தாஸாய நம :
6. ஸ்ரீமத் யாமுந் முநயே நம :
7. ஸ்ரீ ராமமிச்ராய நம :
8. ஸ்ரீ புண்டரீகாக்ஷாய நம :
9. ஸ்ரீமந் நாதமுநயே நம :
10. ஸ்ரீமதே சடகோபாய நம :
11. ஸ்ரீமதே விஷ்வக் ஸேநாய நம :
12. ஸ்ரீயை நம :
13. ஸ்ரீதராய நம :

**சுலோக குருபரம்பரை**

ஓம் அஸ்மத் தேசிகம், அஸ்மதீய,
பரமாசார்யான், அசேஷான் குரூந்,
ஸ்ரீமந் லக்ஷ்மணயோகி புங்கவ,
மஹாபூர்ணௌ, முநிம் யாமுநம்,



ஸ்ரீ ஜெயகிருஷ்ணா பெஸ்டிசைட்ஸ் (பி) லிமிடெட்

Mfrs : Superier Quality Agro Chemicals

29/8-B, வெள்ளக்கல்பட்டி, சேலம்-12. போன் : 2345027

ராமம், பத்மவிலோசனம்,
முநிவரம் நாதம் சட த்வேஷிணம்,
ஸேநேசம், ச்ரியம் இந்திரா ஸஹசலரம்,
நாராயணம் ஸம்ஸ்ரயே.

**"திருமந்திரம்"**

ஓம் நமோ நாராயணாய

**"த்வயம்"**

ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே
ஸ்ரீமதே நாராயணாய நம :

**"ஸ்ரீ க்ருஷ்ண சரம சுலோகம்"**

ஸர்வதர்மான் பரித்யஜ்ய
மாம் ஏகம் சரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ
மோக்ஷ யிஷ்யாமி மாசுச :

**ஸ்ரீராம சரமே சுலோகம்**

ஸக்ருதேவ ப்ரபந்நாய
தாவாஸ்மீதிச யாசதே
அபயம் ஸர்வ பூதேப்யோ
ததாமி ஏதத் வ்ரதம் மம.

**ஸ்ரீவராஹ சரம சுலோகம்**

ஸ்திதே மநஸி சுஸ்வஸ்தே
சரீரே ஸதி யோ நர:
தாதுஸாம்யே ஸ்திதே ஸ்மர்த்தா
விஸ்வ ரூபஞ்ச மாமஜம்

SALEM PIPES
WHOLE SALE DEALERS FOR :
VISAFLEX ISI & ORIENT PVC PIPES, STAR PVC FITTINGS, G.I.PIPES AND ISI MARKED G.I. PIPE FITTINGS, G.M. GATE VALVES & C.P. FITTINGS INFRA WATER TANK & HDPE PIPES AND ALL PLUMBING MATERIALS
VISAFLEX ®
RIGID PVC PIPES
83C, V Market Road, Salem-1.
© 2264300, 2264052, 2267051.
Fax : 91- 427 - 2267053
Branches : Coimbatore
© 2236946, 2234150. Trichy © 2700746



ததஸ்தம் ம்ரிய மாணந்த்து
காஷ்ட பாஷாண ஸந்நிபம்
அஹம் ஸ்மராமி மத்பக்தம்
நயாமி பமாம் கதிம்.

1. தன் ஆசாரியர் தனியன், 2. அவருக்கு முன்னிருந்த ஆசாரியர் தனியன், 3. அவருக்கு முன்னிருந்த ஆசாரியர் தனியன்கள் ஆகியவற்றை அநுஸந்தித்துக்கொள்ள வேண்டும். பின்பு திருமண் பெட்டியை மூடி பத்திரமாக எடுத்து வைத்து விட வேண்டும்.

**7. திருத்துழாய் எடுத்தல்**

ஞாயிற்றுக்கிழமை, செவ்வாய்க்கிழமை, வெள்ளிக்கிழமை, அஷ்டமி திதி, துவாதசி திதி, சதுர்த்தசி திதி, சங்கராந்தி, யுகாதி, பருவ சந்தி முதலிய தினங்கள் திருத்துழாய் எடுக்கக்கூடாத நாட்கள் ஆகும். ஏனைய தினங்களில் எடுத்து வைத்துள்ள திருத்துழாயை ஸமர்ப்பிக்கலாம்.

திருத்துழாய் வனத்திற்குச்சென்று பயபக்தியோடு திருத்துழாய்த் தாயாருக்கு அஞ்சலி செய்து, அருளிச்செயலை அநுஸந்தித்துக் கொண்டே, நகம்படாமல், நான்கு இதழோடு கூடிய திருத்துழாய்க் கொழுந்தினை எடுக்க வேண்டும். ஒவ்வொரு இலையாகப் பறிக்கக்கூடாது. சுத்தமான இடத்தில் சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும்.

**8. திருவாராதனம்**

ஆசாரியர் தனியனை அநுஸந்தித்துக் கொண்டு கோயில் ஆழ்வார் முன்பு தண்டம் ஸமர்ப்பிக்க வேண்டும். பின்பு, ஆசாரியனை மனதிற்கொண்டு,

நாயகனாய் நின்ற நந்தகோபானுடைய
கோயில் காப்பனே ! கொடித் தோன்றும் தோரண
வாசல் காப்பனே ! மணிக் கதவம் தாள் திறவாய்
ஆயர் சிறுமிய ரோமுக்கு - அறை பறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்
தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடவான்


Srinivasa Shop
Ph : 2220990
2210570
Cell : 98431-21057
"The Cell Phone Shop"
Authorised dealer for Nokia Mobile Phones
All Model Mobile Phone Service Undertaken
309, Main Road, Shevapet, Near Karur Vysya Bank Ltd., Salem - 2.

வாயால் முன்ன முன்னம் மாற்றதே யம்மா, நீ
நேச நிலைக் கதவம் நீக்கேலோ ரெம்பாவாய்.

என்ற பாசுரத்தை அநுஸந்தித்துக் கொண்டு, மூன்று தடவை கையைத் தட்டிவிட்டு, கதவைத் திறக்க வேண்டும்.

**திருப்பள்ளி எழுச்சியுடன் துயில் எழுப்புதல்**

கதிரவன் குண திசைச் சிகரம் வந்து அணைந்தான்
கணை இருள் அகன்றது காலையம் பொழுதாய்
மது விரிந்து ஒழுகின மாமலர் எல்லாம்
வானவர் அரசர்கள் வந்து வந்து ஈண்டி
எதிர் திசை நிறைந்தனர் இவரொடும் புகுந்த
இருங் களிற்று ஈட்டமும் பிடியோடு முரசும்
அதிர்தலில் அவை கடல் போன்று உளது எங்கும்
அரங்கத்தம்மா பள்ளி எழுந்தருளாயே.

**“பெருமாளை எழுந்தருளி வீற்றிருக்கும்படி ப்ரார்த்தித்தல்”**

மாரி மலை முழைஞ்சில் மன்னிக் கிடந்து உறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீ விழித்து
வேரி மயிர் பொங்க எப்பாடும் பேர்ந்து உதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போ தருமா போலே நீ பூவைப் பூவண்ணா – உன்
கோயில் நின்றும் இங்ஙனே போந்து அருளி கோப்புடைய
சீரிய சிங்காசனத்து இருந்து யாம் வந்த
காரியம் ஆராய்ந்து அருளேலோர் எம்பாவாய்.

என்று சொல்லி திருத்துழாய் சமர்ப்பித்து பின்பு,
மங்களாசாஸனம் செய்ய வேண்டும்.

(தொடரும்....)


சுவை மிகுந்தது ; தரத்தில் சிறந்தது
காயத்ரி பிராண்டு, கோதுமை மாவு, மைதா, ரவை, ராகி மாவு,
அரிசி மாவு, கடலை மாவு, சேமியா ஆகிய தரமான பொருட்களுக்கு
காயத்ரி பிராண்டு மட்டுமே !

ஸ்ரீ காயத்ரி ஸ்டோர்ஸ்
108-A, கன்னடியார் தெரு, சேலம் – 1.போன் : 2260781




ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ வைஷ்ணவ நித்ய அநுஷ்டாந முறை

(திருச்சித்ரகூடம் Dr. A.V. ரங்காச்சாரியர் ஸ்வாமிகள்)

அன்று இவ் உலகம் அளந்தாய் அடி போற்றி
சென்று அங்குத் தென்னிலங்கை சென்றாய் திறல் போற்றி
பொன்றச் சகடம் உதைத்தாய் புகழ்போற்றி
கன்று குணிலா எறிந்தாய் கழல் போற்றி
குன்று குடையா எடுத்தாய் குணம் போற்றி
வென்று பகை கெடுக்கும் நின் கையில் வேல் போற்றி
என்று என்று உன் சேவகமே ஏத்திப் பறை கொள்வான்
இன்று யாம் வந்தோம் இரங்கு ஏல் ஓர் எம்பாவாய்.

உடன் கற்பூரஹாரத்தி செய்தல் வேண்டும் அப்போது

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறு ஆயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா, உன்
சேவடி செவ்வி திருக்காப்பு,

அடியோமோடும் நின்னோடும்
பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு
வடிவாய் நின் வல மார்பினில்
வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு
படைபோர் புக்கு முழங்கும்.
அப் பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே
என்று பாசுரங்களை ஸேவிக்க வேண்டும்.

பின்பு, பழைய புஷ்பங்களையும், திருத்துழாயையும் எடுத்துவிட்டு, பெருமாளைச் சுற்றி சுத்தும் செய்ய வேண்டும்.




ஸ்ரீ ஜெயகிருஷ்ணா பெஸ்டிசைட்ஸ்
(பி) லிமிடெட்
Mfrs : Superier Quality Agro Chemicals
29/8-B, வெள்ளக்கல்பட்டி, சேலம்-12. போன் : 2345027

உடுத்துக் களைந்த நின் பீதக ஆடையுடுத்துக் கலத்ததுண்டு
தொடுத்த துழாய் மலர் சூடிக் களைந்தன
சூடுமித் தொண்டர்களோம்
விடுத்த திசைக் கருமந் திருத்தித்
திருவோணத் திருவிழவில்
படுத்த பைந் நாகணைப் பள்ளி கொண்டானுக்குப்
பல்லாண்டு கூறுதுமே.

என்ற பாசுரம் பாடி, எம்பெருமானின் வலது பக்கத்தில் நின்று கொண்டு, கைகளைக் கூப்பிக் கொண்டு, ஸ்ரீமதே நாராயணாய நம:, ச்ரீம் ச்ரியை நம:, பூம் பூம்யை நம : என்று சொல்லி

<u>வட்டில்களில் தீர்த்தம் சேர்த்தல்</u>

வாசனை திரவியங்கள் சேர்க்கப்பட்ட தீர்த்தம் வைக்கும் பாத்திரம் திருக்காவேரி. திருக்காவேரி என்னும் திருமஞ்சன பாத்திரத்தில் தீர்த்தம் நிறைத்து, அதில் பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ, ஏலக்காய், சந்தனம், முதலிய பரிமள திரவியங்களை அறைத்து அதில் சேர்க்க வேண்டும். அதன் பின் அதில் திருத்துழாய் சேர்த்து, வலக்கையால் திருக்காவேரிப் பாத்திரத்தின் வாயை மூடிக்கொண்டு "ஸ்ரீமதே நாராயணாய நம:" என்று ஐந்து தரம் சொல்லிவிட்டு,

இந்தத் தீர்த்தத்தில் ஒரு உத்தரணி தீர்த்தம் எடுத்து, ஐந்து வட்டில்களிலும் துளித்துளி தீர்த்தத்தைத் தெளித்து, சுத்தம் செய்ய வேண்டும். இந்த் ஐந்து வட்டில்களையும் வலக்கையினால் மூடி கொண்டு, ஐந்து தடவை "ஸ்ரீமதே நாராயணாய நம", என்று சொல்லி, பின்பு அர்க்கிய வட்டிலில் இருந்து ஒரு உத்தரணி தீர்த்தம் எடுத்து, இடக்கையில் பிடித்துக்கொண்டு வலது கையிலுள்ள நடுவிரலுக்கும், ஆள்காட்டி விரலுக்கும் இடையில் திருத்துழாயை இடுக்கிக் கொண்டு, அந்தக் கையை உத்தரணியின் மேல் வைத்து மூடிக்கொண்டு, இருகைகளையும் முகத்துக்கு நேரே புருவங்களின் இடையே தூக்கிக் கொண்டு எம்பெருமானிடத்தில் "விரஜா தீர்த்தமாகவும், காவேரி தீர்த்தமாகவும்

**SALEM PIPES**
WHOLE SALE DEALERS FOR :
VISAFLEX ISI & ORIENT PVC PIPES, STAR PVC FITTINGS, G.I.PIPES AND ISI MARKED G.I. PIPE FITTINGS, G.M. GATE VALVES & C.P. FITTINGS INFRA WATER TANK & HDPE PIPES AND ALL PLUMBING MATERIALS
**Branches** : Coimbatore
© 2236946, 2234150. Trichy © 2700746
VISAFLEX ®
RIGID PVC PIPES
83C, V Market Road, Salem-1.
© 2264300, 2264052, 2267051.
Fax : 91- 427 - 2267053



திருவுள்ளம் பற்றவேணும்" என்று ப்ரார்த்தனை செய்து கொண்டு, அந்த தீர்த்தத்தை, அர்க்கிய 1. பாத்ய 2. ஆசமன 3. ஸ்நாந 4. சுத்தோதகம் 5. திருக்காவேரி 7. ஆகியவற்றில் துளித் துளி தீர்த்தத்தைச் சேர்த்துவிட்டு, திருவாரதன மூர்த்திகளிலும் துளி சேர்த்து விட்டு, தன் சிரசில் கொஞ்சம் சேர்த்துக் கொண்டு, மீதியை படிகத்தில் 6–வது வட்டிலான படிகத்தில் சேர்த்து விட வேண்டும்.

"ஸர்வ மங்கள விக்ரஹாய ஸமஸ்த பரிவாராய ஸ்ரீமதே நாராயணாய நம: என்று அநுஸந்தித்துக் கொண்டு, 1. அர்க்கிய வட்டிலில் உள்ள உத்தரணியால் தீர்த்தம் எடுத்து, பெருமாள் முன் காட்டி "அர்க்கியம் கண்டருள வேணும்" என்று சொல்லி, அதை 6–வது வட்டிலான படிகத்தில் சேர்த்து விட வேண்டும்.

அதன்பின் அந்த உத்தரணியை ஐந்தாவது வட்டிலான சுத்தோகத்தில் சுத்தம் செய்துகொள்ள வேண்டும்.

மறுபடியும் அந்த உத்தரணியை அர்க்கிய வட்டிலான 1–ல் தீர்த்தத்தை எடுத்து, பெருமாள் முன் காட்டி, "அர்க்கியம் கண்டருள வேணும்" என்று சொல்லி, அதை 6–வது வட்டிலான படிகத்தில் சேர்த்துவிட வேண்டும்.

பின், அந்த உத்தரணியை 5–வது வட்டிலான சுத்தோகத்தில் சுத்தம் செய்து கொள்ள வேண்டும்.

அதன்பின் அந்த உத்தரணியை 5–வது வட்டிலான சுத்தோதகத்தில் சுத்தம் செய்து கொண்டு, அர்க்கிய பாத்திரத்தில் உத்தரணியை சேர்த்துவிட வேண்டும். இவ்வாறு அர்க்கிய வட்டிலிருந்து மூன்று தடவை உத்தரிணியால் தீர்த்தம் ஸமர்ப்பிக்க வேண்டும்.பாத்யம் (2) வட்டிலில், உள்ள உத்தரணியால் தீர்த்தம் எடுத்து, பெருமாள் முன் காட்டி, "பாத்யம் கண்டருள வேணும்" என்று சொல்லி, அதை 6–வது வட்டிலான படிகத்தில் சேர்த்துவிட வேண்டும்.

அதன்பின் அந்த உத்தரணியை 5–வது வட்டிலான சுத்தோகத்தில் சுத்தம் செய்து கொண்டு, பாத்ய (2) வட்டிலில் உத்தரணியை சேர்த்து விட வேண்டும்.


Srinivasa Shop
Ph : 2220990
2210570
Cell : 98431-21057
"The Cell Phone Shop"
Authorised dealer for Nokia Mobile Phones
All Model Mobile Phone Service Undertaken
309, Main Road, Shevapet, Near Karur Vysya Bank Ltd., Salem - 2.

இவ்வாறு பாத்ய வட்டிலில் மூன்று தடவை முன்போலவே செய்ய வேண்டும்.

ஆசமனம் (3) வட்டிலிலுள்ள உத்தரணியால் தீர்த்தம் எடுத்து பெருமாள் முன்காட்டி "ஆசமனம் கண்டருள வேணும்" என்று சொல்லி அதை 6–வது வட்டிலான படிகத்தில் சேர்த்து விட வேண்டும்.

அதன்பின் அந்த உத்தரணியை 5–வது வட்டிலான சுத்தோகத்தில் சுத்தம் செய்து கொண்டு, ஆசமனம் (3) வட்டிலில் உத்தரணியைச் சேர்த்துவிட வேண்டும்.

இவ்வாறு ஆசமன வட்டிலில் மூன்று தடவை முன்போலவே செய்ய வேண்டும்.

அர்க்கிய (1) வட்டிலில், ஒரு உத்தரணி தீர்த்தம் எடுத்து திருத்துழாயினால், திருமுத்து (பற்கள்) விளக்கி, திருநா விழித்து அந்த தீர்த்தத்தையும், திருத்துழாயையும் படிகத்தில் (6) சேர்த்து விட வேண்டும்.

முன் போலவே அர்க்கியம், பாத்யம், ஆசமனங்கள் மூன்றையும், மூன்று தரம் ஸமர்பித்து, ஸமர்ப்பித்த தீர்த்தத்தை, படிகத்தில் (6)–ல் சேர்த்துவிட வேண்டும்.

பின்பு "திருமஞ்சனத்திற்கு எழுந்தருள வேணும்" என்று பிரார்த்தித்து, திருத்துழாய் ஸமர்பிக்க வேண்டும்.

ஸ்நான (4) வட்டிலிலுள்ள உத்தரணியால் தீர்த்தம் எடுத்து, பெருமாள் முன்பு காட்டி, "திருமஞ்சனம் கண்டருள வேணும்" என்று சொல்லி, அதை 6–வது வட்டிலான படிகத்தில் சேர்த்து விட வேண்டும்.

அதன்பின் அந்த உத்தரணியை 5–வது வட்டிலான சுத்தோதகத்தில் சுத்தம் செய்து கொண்டு, ஸ்நான (4) வட்டிலில் உத்தரணியை சேர்த்துவிட வேண்டும். (தொடரும்....)

**ஆன்மீக செய்திகள் உங்களின் இல்லம் தேடி...!**

தமிழகத்தின் முக்கிய நகரங்களிலும், பாண்டியிலும் தனது ஆன்மிக சேவையை செய்து கொண்டிருக்கும் நமது இதழ் தங்களின் இல்லம் தேடி வர வேண்டுமா ? ஆம் எனில் தாங்கள் செய்ய வேண்டியது ரூபாய் ஐம்பது மட்டும் கீழ்க்கண்ட முகவரிக்கு (M.O) மணியார்டர் செய்து ஒரு வருடத்திற்கு இதழை பெறலாம்.

**G.R. முரளி,** பொறுப்பாளர், ஆன்மிக செய்திகள்,

ஸ்ரீ சுந்தரராஜ பெருமாள் பக்த சபா, 277, மெயின் ரோடு, அரிசிப்பாளையம், சேலம் –9.

*சுவை மிகுந்தது ;* *தரத்தில் சிறந்தது*

காயத்ரி பிராண்டு, கோதுமை மாவு, மைதா, ரவை, ராகி மாவு, அரிசி மாவு, கடலை மாவு, சேமியா ஆகிய தரமான பொருட்களுக்கு

*காயத்ரி பிராண்டு மட்டுமே !*



**ஸ்ரீ காயத்ரி ஸ்டோர்ஸ்**

108-A, கன்னடியர் தெரு, சேலம் – 1.போன் : 2260781



பலமன்னர்படச் சுடராழியினைப்
பகலோன் மறையப் பணிகொண்டனிசேர்
நிலமன்னனுமாய் உலகாண்டவனுக்கிடம்
மாமலையாவது நீர்மலையே'

கவளயானைக் கொம்பொசித்த கண்ணனென்றும் காமருசீர் குவளைமேகமன்ன மேனி கொண்டகோன் என்றானை என்னும் தவளமாட நீடு நாங்கைத் தாமரையாள் கேள்வனென்றும் பவளவாயால் என் மடந்தை பார்த்தன் பள்ளி பாடுவாளே

'தம்பியொரு தாமொருவர் தன் துணைவி
காதல் துணையாக முனநாள்
வெம்பியெரி கானகம் உலாவுமவர்
தாமினிது மேவுநகர்தான்
கொம்புகுதி கொண்டு குயில் கூவ
மயிலாமெழிலார் புறவுசேர்
நம்பியுறைகின்ற நகர்
நந்திபுர விண்ணகரம் நன்று மனமே'

பூணுலாமென்முலைப் பாலைமார் பொய்யினை மெய்யிதென்று
பேணுவார் பேசமப்பேச்சை நீ பிழையெனக் கருதினாயேல்
நீணிலா வெண்குடை வாணனார் வேள்வியில் மண்ணிரந்த
மாணியா வல்லவாழ் சொல்லுமா வல்லையாய் மருவுநெஞ்சே'

என இப்படிப் பல பாடல்களில், யதுகை, மோனை, இசையோடு கூடிய ஓசை பொருந்திய சொற்களை அமைத்து, படிக்கும்போதே இன்பம் பெருகும்படி அமைத்துள்ளார். (தொடரும்...)

**ஆன்மீக செய்திகள் உங்களின் இல்லம் தேடி...!**

தமிழகத்தின் முக்கிய நகரங்களிலும், பாண்டியிலும் தனது ஆன்மிக சேவையை செய்து கொண்டிருக்கும் நமது இதழ் தங்களின் இல்லம் தேடி வர வேண்டுமா ? ஆம் எனில் தாங்கள் செய்ய வேண்டியது ரூபாய் ஐம்பது மட்டும் கீழ்க்கண்ட முகவரிக்கு (M.O) மணியார்டர் செய்து ஒரு வருடத்திற்கு இதழை பெறலாம்.

**G.R. முரளி,** பொறுப்பாளர், ஆன்மிக செய்திகள்,

ஸ்ரீ சுந்தரராஜ பெருமாள் பக்த சபா, 277, மெயின் ரோடு, அரிசிப்பாளையம், சேலம் –9.

Cell : 94432 - 61560 ஸ்ரீ மதே ராமாநுஜாய நம : ✆ : Shop : 2264078 Resi : 2261560



**வாசுதேவ் சில்க்ஸ் & சேரீஸ்**

28, டி.பி.சி. லேண், (பஜார் தெரு அருகில்) சேலம் – 1.

ஆன்மீக, வைதிக கைத்தறி வேஷ்டி, சாமி துண்டு வேஷ்டிகள் மற்றும் நவீன சேலைகள் மொத்த விற்பனை விலையில் கிடைக்கும்.

ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ வைஷ்ணவ நித்ய அநுஷ்டாந முறை

**(திருச்சித்ரகூடம் Dr. A.V. ரங்காச்சாரியர் ஸ்வாமிகள்)**

இவ்வாறு ஸ்நான வட்டிலில் மூன்று தடவை முன் போலவே ஸமர்ப்பிக்க வேண்டும் பின்பு

வெண்ணெய் அளைந்த குணுங்கும்
விளையாடு புழுதியுங் கொண்டு
திண்ணென இவ்விரா வுன்னைத்
தேய்த்துக் கிடக்க நானொட்டேன்
எண்ணெய் புளிப்பழங் கொண்டு
இங்கு எத்தனை போதும் இருந்தேன்
நண்ணலரிய பிரானே !
நாரணா நீராட வாராய்.
கார்மலி மேனி நிறத்துக்
கண்ணபிரானை யுகந்து
வார்மலி கொங்கை யசோதை
மஞ்சன மாட்டிய வாற்றைப்
பார்மலி தொல் புதுவைக்கோன்
பட்டர்பிரான் சொன்னபாடல்
சீர்மலி செந்தமிழ் வல்லார்
தீவினை யாதுமிலரே !

சூட்டு நன் மாலைகள் தூயன வேந்தி
விண்ணோர்கள் நன்னீ
ராட்டி அந்தூபம் தரா நிற்கவே
யங்கு, ஓர் மாயையினால்
ஈட்டிய வெண்ணெய்தொடு வுண்ணப்

ராமானுஜம் பேப்ரிக்
ஸ்ரீ வரலக்ஷ்மி பேப்ரிக்ஸ்
சில்க்ஸ் & சேரீஸ்
© Shop: 2264589
கைத்தறி துணி உற்பத்தியாளர்கள்,
387, பஜார் தெரு, (மேல்மாடி)
சேலம்–636 001.
*வைதீக காலங்களுக்கு ஏற்ற சமஜோடி 9x5, 10x6, கஞ்சி முந்தி வேஷ்டி வகைகள் தரமானதாக கிடைக்கும்.*



போந்து இமிலேற்றுவன் கூன்
கோட்டிடை ஆடின கூத்து
அடல் ஆயர் தம் கொம்பினுக்கே
திண்ணார் வெண் சங்குடையாய்
திருநாள் திருவோணம் இன்று ஏழுநாள்
முன்பண்ணோர் மொழியாரைக்கூவி முளையட்டிப்
பல்லாண்டு கூறுவித்தேன்
கண்ணாலம் செய்யக் கறியும்
கலத்த தரிசியும் ஆக்கி வைத்தேன்
கண்ணா ! நீ நாளைத் தொட்டுக் கன்றின்பின்
போகேல், கோலஞ் செய்து இங்கே இரு

என்ற நீராட்டப் பாசுரங்களை ஸேவிக்க வேண்டும்.

## திருஒற்றுவாடை ஸமர்ப்பித்தல்

உலர்ந்த ஆடையின் ஒரு தலைப்பைக் கொண்டு திருக்கைகளையும், திருப்பவளத்தையும் துடைத்து, மற்றொரு பக்கத்தால் திருவடிகளைத் துடைக்க வேண்டும். (இதற்கு திருவொற்றுவாடை ஸமர்ப்பித்தல் என்று பெயர்)

அதன்பனி, திருத்துழாய் எடுத்துக்கொண்டு,
வகையால் மனமொன்றி மாதவனை – நாளும்
புகையால் விளக்கால் புதுமலரால் நீரால்
திசைதோறு அமரர்கள் சென்றிறைஞ்ச நின்ற
தகையான் சரணம் தமர்கட்கோ பற்றே

என்ற பாசுரம் சொல்லி, அர்க்கிய, பாத்ய, ஆசமனீயங்களை, உத்தரிணி தீர்த்தத்தால் முன் போலவே 3 முறை ஸமர்ப்பித்து.

கேசவன் தமர் கீழ்மேல் மெரேழ் எழு பிறப்பும்
மாசதிரிது பெற்று நம்முடைய வாழ்வு வாய்க்கின்றவா
ஈசன் என் கருமாணிக்கம் என் செங்கோலக் கண்ணன்
விண்ணோர் நாயகன் எம்பிரான் எம்மான் நாராயணனாலே



ஸ்ரீ ஜெயகிருஷ்ணா பெஸ்டிசைட்ஸ்
(பி) லிமிடெட்
Mfrs : Superier Quality Agro Chemicals
29/8-B, வெள்ளக்கல்பட்டி, சேலம்-12. போன் : 2345027

என்று பரசுரம் சொல்லி, திருமண் காப்பு சாத்துவதாகத்
திருத்துழாயால் காட்டி,

பூசும் சாந்தென நெஞ்சமே புனையும் கண்ணி எனதுடைய
வாசகம் செய் மாலையே வான்பட்டாடையும் அஃதே
தேசமான அணிகலனும் என் கைகூப்புச் செய்கையே
ஈசன் ஞாலம் உண்டுமிழ்ந்த எந்தை ஏக மூர்த்திக்கே

என்ற பாசுரம் சொல்லி, வஸ்திரம் புஷ்பம், ஆபரணம்
ஆகியவை சாத்துவதாக திருத்துழாய் சேர்த்து,

**<u>“தூபம்” கண்டருளச் செய்தல் (சாம்பிராணி)</u>**

பரிவதில் ஈசனைப் பாடி
விரிவது மேவலுறுவீர்
பிரிவகை யின்றி நன்னீர்தூய்
புரிவதும் புகை பூவே. என்ற பாசுரம் சொல்லி தூபமும்.

வையம் தகளியா வார்கடலே நெய்யாக
வெய்ய கதிரோன் விளக்காக – செய்ய
சுடராழியான் அடிக்கே சூட்டினேன் சொன்மாலை
இடராழி நீங்குகவே என்று என்ற பாசுரம் சொல்லி, தீபமும்,

“பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு” என்ற
பாசுரம் சொல்லி கற்பூர ஹாரத்தியும்
ஸமர்ப்பிக்க வேண்டும்.

பிறகு, அர்க்கியங்களும், பாத்ய, ஆசமனீய,
திருஒற்றுவாடையும் ஸமர்பித்து.

சென்றால் குடையாம், இருந்தால் சிங்காசனமாம்
நின்றால் மரவடியாம் நீள் கடலுள் – என்றும்
புணையாம் மணி விளக்காம், பூம்பட்டால் புல்கும்
அணையாம் திருமாற்கு அரவு

**SALEM PIPES**
WHOLE SALE DEALERS FOR :
VISAFLEX ISI & ORIENT PVC PIPES, STAR PVC FITTINGS, G.I.PIPES AND ISI MARKED G.I. PIPE FITTINGS, G.M. GATE VALVES & C.P. FITTINGS INFRA WATER TANK & HDPE PIPES AND ALL PLUMBING MATERIALS
Branches : Coimbatore
✆ 2236946, 2234150. Trichy ✆ 2700746

**VISAFLEX®**
RIGID PVC PIPES

83C, V Market Road, Salem-1.
✆ 2264300, 2264052, 2267051.
Fax : 91- 427 - 2267053



என்ற பாசுரம் சொல்லி, மந்திர புஷ்பமாக திருத்துழாய் ஸமர்ப்பிக்க வேணும்.

பின்பு, “பராங்குச பரகால யதிவராதிகளை அடிபணிகிறேன்” என்று சொல்லி ஆழ்வார் ஆசார்யர்களுக்கு, “ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்” என்று அர்க்கியம், பாத்யம், ஆசமனீயம் ஸமர்ப்பித்து, திருத்துழாய் ஸமர்ப்பிக்க வேணும்.

**<u>9. ஸேவா காலம்</u>**

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தொடங்கி, திருப்பல்லாண்டு, திருப்பள்ளியெழுச்சி, திருப்பாவை, இவைகளை ஸேவிக்க வேண்டியது.

**<u>10. தளிகை ஸமர்பித்தல்</u>**

தளிகையைக் கொண்டு வந்து, அதில் திருத்துழாயை ஸமர்ப்பித்து, அர்க்கிய வட்டிலில் உள்ள உத்தரணியால் தீர்த்தம் எடுத்து, தளிகையை ப்ரோக்ஷித்துவிட வேண்டும். அப்பொழுது “ஸ்ரீமதே நாராயணாய நம:” என்று சொல்ல வேண்டும்.

(தொடரும்...)

---

**அருள்மிகு அழகிரிநாத சுவாமி திருக்கோயில்,** கோட்டை பெருமாள் கோயில், சேலம்.

***<u>76-வது ஆண்டு ஸ்ரீ ராமநவமி உற்சவம்</u>***

30–3–2004 முதல் 9–4–2004 வரை மாலை 6–00 மணிக்கு உற்சவருக்கு சிறப்பு அலங்காரம் நடைபெறும். 5–4–2004 முதல் 6–4–2004 வரை காலை 6–00 மணி முதல் இரண்டு தினங்கள் மட்டும் மூலவர் பெருமாள் தாயாருக்கும் ஆஞ்சநேயருக்கும் உற்சவருக்கும் முத்தங்கி அலங்காரம் நடைபெறும்.
7–4–2004 முதல் 9–4–2004 வரை காலை 6–00 மணி முதல் இரவு 9–00 மணி வரை மூன்று தினங்கள் மட்டும் மூலவர் பெருமாளுக்கு திருப்பதி வெங்கடேஸ்வர அலங்காரமும் தாயார் பத்மாவதி அலங்காரமும் (தங்க கவசம் அலங்காரம்) நடைபெறும். இந்த மூன்று தினங்கள் திருப்பதி போல் ஆறுகால பூஜைகள் (சுப்ரபாதம் முதல் இரவு ஏகாந்த சேவை வரை)நடைபெறும். 7–4–2004 மாலை 6–00 மணிக்கு உற்சவருக்கு சந்தன காப்பு அலங்காரம். 5–4–2004 முதல் 9–4–2004 வரை கண்ணாடி மாளிகை சேவை உண்டு மாலை 5–00 மணி முதல் இரவு 8–00 மணி வரை. 9–4–2004 வெள்ளிக்கிழமை காலை 9–00 மணிக்கு ஸ்ரீ ஆஞ்சநேயருக்கு விசேஷ அபிஷேக ஆராதனையும் வடமாலையும், வெள்ளி கவச அலங்காரமும் நடைபெறும். 9–4–2004 வெள்ளிக்கிழமை இரவு 7–00 மணிக்கு வெள்ளி கருட வாஹனத்தில் ஸ்ரீ சுந்தரராஜப் பெருமாள் திருவீதி உலா நடைபெறும்.

உத்ஸவதாரர்கள் திரு. **K.G.M. ஆதிகேசவசெட்டி கம்பெனி,**
ஜவுளி வியாபாரம், சேலம் – 636 001.

**ச. செந்தூரான்,** எம்.ஏ
நிர்வாக அதிகாரி.



*Srinivasa Shop*
Ph : 2220990
2210570
Cell : 98431-21057
**"The Cell Phone Shop"**
*Authorised dealer for Nokia Mobile Phones*
All Model Mobile Phone Service Undertaken
309, Main Road, Shevapet, Near Karur Vysya Bank Ltd., Salem - 2.

ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ வைஷ்ணவ நித்ய அநுஷ்டாந முறை

**(திருச்சித்ரகூடம் Dr. A.V. ரங்காச்சாரியர் ஸ்வாமிகள்)**

வலக்கையினால் ஸ்பரிசித்து "ஸ்ரீமந் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே ! ஸ்ரீமதே நாராயணாய நம :" என்று அநுஸந்திக்க வேண்டும்.

அந்த ப்ரஸாதத்தை பகவான் முன் காட்டி, "அஸ்மத் ஸ்வாமி ஹஸ்தத்தினால் திருப்போனகம் கண்டருளவேணும்" என்று சொல்லி,

நாறு நறும் பொழில் மாலிருஞ்
சோலை நம்பிக்கு நான்
நூறு தடாவில் வெண்ணெய் வாய்
நேர்ந்து பராவி வைத்தேன்
நூறு தடா நிறைந்த
அக்கார வடிசில் சொன்னேன்
ஏறு திருவுடையான் இன்று வந்து
இவை கொள்ளுங் கொலோ?
இன்று வந்து இத்தனையும் அமுது
செய்திடப்பெறில் நான்
ஒன்று நூறு ஆயிரமாக் கொடுத்துப்
பின்னும் ஆளும் செய்வன்
தென்றல் மணம் கமழும்
திருமாலிஞ் சோலை தன்னுள்
நின்றபிரான், அடியேன் மனத்தே
வந்து நேர்படிலே

கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா ! உன்தன்னைப்
பாடிப் பறை கொண்டு யாம்பெறு சம்மானம்
நாடு புகழும் பரிசினால் நன்றாகச்
சூடகமே தோள் வளையே தோடே செவிப்பூவே

ராமானுஜம் பேப்ரிக் | © Shop: 2264589
ஸ்ரீ வரலக்ஷ்மி பேப்ரிக்ஸ்
சில்க்ஸ் & சேரீஸ்
கைத்தறி துணி உற்பத்தியாளர்கள்,
387, பஜார் தெரு, (மேல்மாடி)
சேலம்–636 001.
*வைதீக காலங்களுக்கு ஏற்ற சமஜோடி*
*9x5, 10x6, கஞ்சி முந்தி வேஷ்டி*
*வகைகள் தரமானதாக கிடைக்கும்.*



பாடகமே என்றனைய பல்கலனும் யாமணிவோம்
ஆடை யுடுப்போம் அதன் பின்னே பால்சோறு
மூட நெய் பெய்து முழங்கை வழிவார
கூடியிருந்த குளிர்ந்து ஏல் ஓர் எம்பாவாய்

"ஸர்வ மங்கள விக்ரஹாய ஸமஸ்த பரிவாராய
ஸ்ரீமதே நாராயணாய நம:"

என்று அநுஸந்தித்து ப்ரசாதம் கண்டருளச் செய்ய வேண்டும்.

சுத்தோதக வட்டிலில் உள்ள தீர்த்தத்துடன் "பானீயம் கண்டருள வேணும்" என்று கூறி 6–வது வட்டிலான படிகத்தில் சேர்த்துவிட வேண்டும்.

மறுபடியும் அர்க்கியம், பாத்யம், ஆசமனங்கள் முன் போலவே ஸமர்ப்பிக்க வேண்டும். திருவொற்றுவாடை ஸமர்ப்பிக்க வேணும்.

## 11. "சாற்றுமுறை"

கற்பூர ஆரத்தி காட்டிக்கொண்டு
சிற்றஞ் சிறுகாலே வந்து உன்னைச் சேவித்து உன்
பொற்ற மரையடியே போற்றும் பொருள்கேளாய்
பொற்றம் மேய்த்து உண்ணும் குலத்தில் பிறந்து நீ
குற்றேவ லெங்களைக் கொள்ளாமற் போகாது
இற்றைப் பறை கொள்வானன்றுகாண் கோவிந்தா
எறைக்கும் மேழேழ் பிறவிக்கு முன்றன்னோடு
உற்றோமே யாவோம் உனக்கேநாம் ஆட்செய்வோம்
மற்றை நங் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்.

வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனைத்
திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப் பறை கொண்ட வாற்றை, யணிபுதுவைப்
பைங் கமலத் தன் தெரியல் பட்டர்பிரான் கோதை சொன்ன
சங்கத் தமிழ் மாலை முப்பதும் தப்பாமே
இங்கிப் பரிசு உரைப்பார் ஈர் இரண்டு மால் வரைத்தோள்


ஸ்ரீ ஜெயகிருஷ்ணா பெஸ்டிசைட்ஸ்
(பி) லிமிடெட்
Mfrs : Superier Quality Agro Chemicals
29/8-B, வெள்ளக்கல்பட்டி, சேலம்-12. போன் : 2345027

செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
எங்கும் திருவருள் பெற்று இன்புறுவார் எம்பாவாய்.

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறு ஆயிரம்
மல்லாண்ட திண் தோள் மணிவண்ணா உன்
சேவடி செவ்வி திருக்காப்பு.

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறு ஆயிரம்
மல்லாண்ட திண் தோள் மணிவண்ணா உன்
சேவடி செவ்வி திருக்காப்பு.
அடியோமோடும் நின்னோடும்
பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு
வடிவாய் நின்வல மார்பினில்
வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு
வடிவார் சோதி வலத்துறையும்
சுடர் ஆழியும் பல்லாண்டு
படைபோர் புக்கு முழங்கும்
அப்பாஞ்ச சன்னியமும் பல்லாண்டே

ஸர்வ தேச தசாகாலேஷு
அவ்யாஹத பராக்ரமா
ராமாநுஜார்ய திவ்ய ஆஜ்ஞா
வர்த்ததாம் அபி வர்த்ததாம்.

ராமாநுஜார்ய திவ்ய ஆஜ்ஞா
ப்ரதிவாஸரம் உஜ்ஜ்வலா
திகந்தவ்யாபிநீ பூயாத்
ஸாஹி லோக ஹிதைஷிணீ

ஸ்ரீமந் ஸ்ரீரங்க ச்ரியம நுபத்ரவாம்
அநுதினம் ஸம்வர்த்தய

**SALEM PIPES**
WHOLE SALE DEALERS FOR :
VISAFLEX ISI & ORIENT PVC PIPES, STAR PVC FITTINGS, G.I.PIPES AND ISI MARKED G.I. PIPE FITTINGS, G.M. GATE VALVES & C.P. FITTINGS INFRA WATER TANK & HDPE PIPES AND ALL PLUMBING MATERIALS
Branches : Coimbatore
© 2236946, 2234150. Trichy © 2700746
VISAFLEX ®
RIGID PVC PIPES
83C, V Market Road, Salem-1.
© 2264300, 2264052, 2267051.
Fax : 91- 427 - 2267053



ஸ்ரீமந் ஸ்ரீரங்க ச்ரியமநுபத்ரவாம்
அநுதினம் ஸம்வர்த்தய

நமஸ் ஸ்ரீசைல நாதாய
குந்தீ நகர ஜந்மநே
ப்ரஸாத லப்த பரம பராப்ய
கைங்கர்ய சாலிநே

ஸ்ரீசைலே தயா பாத்ரம்
தீ பக்தி ஆதி குண ஆர்ணவம்
யதீந்த்ர ப்ரவணம் வந்தே
ரம்ய ஜாமாதரம் முநிம்
வாழி திருவாய் மொழிப்பிள்ளை மாதகவால்
வாழும் மணவாள மாமுனிவன் வாழியவன்
மாறன் திருவாற் மொழிப் பொருளை, மாநிலத்தோர்
தேறும்படி உரைக்குஞ் சீர்.
செய்ய தாமரைத் தாளிணை வாழியே
சேலைவாழி திருநாபி வாழியே
துய்ய மார்பும் புரிநூலும் வாழியே
சுந்தரத் திருத் தோளிணை வாழியே
கையும் ஏந்திய முக்கோலும் வாழியே
கருணை பொங்கிய கண்ணிணை வாழியே
பொய்யிலாத மணவாள மாமுனி
புந்தி வாழி புகழ்வாழி வாழியே

அடியார்கள் வாழ அரங்க நகர் வாழ
சடகோபன் தண் தமிழ் நூல்வாழ
கடல் சூழ்ந்த மன்னுலகம் வாழ, மணவாள மாமுனியே
இன்னும் ஒரு நூற்றாண்டு இரும்.

அவர் அவர்களுடைய ஆசாரியரின் வாழித் திருநாமங்களை அநுஸந்தித்துக் கொண்டு, தண்டம் ஸமர்ப்பித்துக் கொள்ள வேண்டும். (தொடரும்...)


Srinivasa Shop
Ph : 2220990
2210570
Cell : 98431-21057
"The Cell Phone Shop"
Authorised dealer for Nokia Mobile Phones
All Model Mobile Phone Service Undertaken
309, Main Road, Shevapet, Near Karur Vysya Bank Ltd., Salem - 2.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ வைஷ்ணவ நித்ய அநுஷ்டாந முறை

(திருச்சித்ரகூடம் Dr. A.V. ரங்காச்சாரியர் ஸ்வாமிகள்)

## 12. "தீர்த்த விநியோகம்"

பின்பு எல்லா வட்டில்களில் உள்ள தீர்த்தத்தை படிகத்தில் சேர்த்து, அதிலிருந்து ஒரு வட்டிலில் உத்தரணியால் தீர்த்தம் எடுத்து மூன்று தடவை உட்கொள்ள வேண்டும்.

திருவடிகளில் அர்ச்சித்த திருத்துழாயை எடுத்து வழங்க வேண்டும். அப்பொழுது த்வயத்தை அநுஸந்திக்க வேண்டும். அதன்பின் பெருமாளுக்கு திருவால வட்டம் ஸமர்ப்பிக்க வேண்டும்.

## 13. "திருக்காப்பு சேர்த்தல்"

"ஸர்வ மங்கள விக்ரஹாய
ஹமஸ்த பரிவாராய
ஸ்ரீமதே நாராயணாய நம:"

என்று திருத்துழாயை ஸமர்ப்பித்து, "சயன ஆசனத்தில் எழுந்தருள வேணும்" என்று சொல்லித் திருத்துழாயை ஸமர்ப்பிக்க வேண்டும்.

அர்க்கியம், பாத்யம், ஆசமநீயம் இவைகளை முறையே ஒன்று, இரண்டு, மூன்று முறை ஸமர்ப்பித்து, கற்பூர ஆரத்தியுடன்

உறகல் உறகல் உறகல்
ஒண்சுடர் ஆழியே சங்கே
அறவெறி நாந்தக வாளே
அழகிய சார்ங்கமே தண்டே

ராமானுஜம் பேப்ரிக்
ஸ்ரீ வரலக்ஷ்மி பேப்ரிக்ஸ்
சில்க்ஸ் & சேரீஸ்
© Shop: 2264589
கைத்தறி துணி உற்பத்தியாளர்கள்,
387, பஜார் தெரு, (மேல்மாடி)
சேலம்-636 001.
வைதீக காலங்களுக்கு ஏற்ற சமஜோடி
9x5, 10x6, கஞ்சி முந்தி வேஷ்டி
வகைகள் தரமானதாக கிடைக்கும்.



இறவு படாமல் இருந்த
எண்மர் உலோக பாலீர்காள்
பறவை அரையா உறகல்
பள்ளி அறை குறிக் கொண்மின்.
அரவத் தமளியினோடும்
அழகிய பாற்கடலோடும்
அரவிந்தப் பாவையும் தானும்
அகம் படி வந்து புகுந்து
பரவைத் திரை பலமோதப்
பள்ளி கொள்கின்ற பிரானை
பரவுகின்றான் விட்டுசித்தன்
பட்டினம் காவற் பொருட்டே
என்று அநுஸந்தித்து கோயில் ஆழ்வாருக்குத்
திருக்காப்பு சேர்த்து
அடியேன் மேவி அமர்கின்ற அமுதே !
இமையோரதி பதியே !
கொடியாவடுபுள் உடையானே !
கோலக் கனிவாய்ப் பெருமானே !
செடியார் வினைகள் தீர்மருந்தே !
திரு வேங்கடத் தெம் பெருமானே !
நொடியார் பொழுதும் உன பாதம்
காண நோவாது ஆற்றேனே.

என்ற பாசுரம் சொல்லி, தண்டம் ஸமர்ப்பித்து, திருவாரதனம் நிறைவு செய்ய வேணும்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ ஜெயகிருஷ்ணா பெஸ்டிசைட்ஸ்
(பி) லிமிடெட்
Mfrs : Superier Quality Agro Chemicals
29/8-B, வெள்ளக்கல்பட்டி, சேலம்-12. போன் : 2345027

51. த்வய மாவது எது? 187

கடவல்லி உபநிஷத்ஸித்தமாய், முற்கூற்ருல் உபாயத்தையும், பிற் கூற்ருல் உபேயத்தையும் கூருநின்ற,

ஸ்ரீமந்நாராயணசரணௌ சரணம்ப்ரபத்யே
ஸ்ரீமதேநாராயணுய நம:

என்னும் மந்த்ரமாம்.

52. கிருஷ்ண சரம சுலோகம் எது? 188

ஸர்வதர்மான் பரித்யஜ்யமாமேகம் சரணம் வ்ரஜ அஹம்த்வா ஸர்வ பாபேப்யோ மோட்சயிஷ்யாமி மாசுச;

என்பதாம்.

53. ராம சரம சுலோகம் எது? 189

ஸக்ருதேவ ப்ரபன்னுய
தவாஸ்மீதி சயாசதே
அபயம் ஸர்வபூதேப்யோ
ததாம்யே தத்வ்ரதம்மம.

என்பதாம்.

54. வராக சரம சுலோகங்கள் எவை? 190

ஸ்திதே மனஸிஸுஸ்வஸ்தே
ஸரீரே ஸதியோ நர:
தாதுஸாம்யே ஸ்திதேஸ்மர்த்தா



விஸ்வரூபஞ்ச மாமஜம்
ததஸ்தம் ம்ரியமாணந்த்து
காஷ்ட பாஷாண ஸந்நிபம்.
அஹம் ஸ்மராமி மத்பக்தம்
நயாமி பரமாங்கதிம்.

என்பனவாம்.

## திரு வாராதனம்.

55. திருவாராதனத்துக்கு முன்பு யாது செய்தல் வேண்டும்? 191

திருவாராதன பாத்திரங்களை சுத்திசெய்துவைத்து, திருத்துழாய் புஷ்பங்கள் முதலியவற்றைச் சேகரித்து வைத்துக்கொள்ளல் வேண்டும்.

## துளசி.

56. திருத்துழாயை எப்படி எடுத்தல் வேண்டும்? 192

திருநந்த வனத்துக்குப்போய், பயபக்தியோடு திருத்துழா யாழ்வானுக்கு அஞ்சலி செய்து, அருளிச்செயலை அனுசந்தித்துக்கொண்டே, நகம் படாமல், துளசி தளங்களையும் புஷ்பங்களையும் எடுத்து திருப்பூங் கூடையில் வைத்துக்கொண்டுவந்து பத்திரப்படுத்தல் வேண்டும்.

57. எப்படி எடுத்து வந்த திருத்துழாய் கொண்டு திருவாராதனம் செய்யலாகாது? 193

பஞ்ச ஸம்ஸ்காரம் பெருதாரும், ஆசௌச முடையாரும், புறச்சமயத்தாரும்; வஸ்திரத்திலும், கையிலும்,

எருக்கு, ஆமணக்கு முதலிய இலைகளிலும்; மசானம் முதலிய அசுத்தமான இடங்களிலும் எடுத்துவந்த திருத்துழாய் கொண்டு திருவாராதனம் செய்யலாகாது.

58. *திருத்துழாய் எடுக்கத் தகாத நாட்கள் எவை?* 194

ஞாயிற்றுக்கிழமை, செவ்வாய்க்கிழமை, வெள்ளிக்கிழமை; அஷ்டமி, துவாதசி, சதுர்த்தசி, சங்க்ராந்தி யுகாதி, பருவசந்தி முதலிய தினங்களாம். இத் தினங்களில் திருத்துழாயை எடுத்திடில் தெய்வ நாயகனை அரியினுடைய சிரத்தைக் கொய்ததொக்கும்.

59. *அந்நாட்களில் எதைக் கொண்டு ஆராதனம் செய்தல் வேண்டும்?* 195

ஏனைய நாட்களில் எடுத்து வைத்த திருத்துழாய் கொண்டு திருவாராதனம் செய்தல் வேண்டும்.

60. *உலர்ந்த திருத்துழாய் கொண்டு ஆராதிக்கலாமா?* 196

திருத்துழாய் தளங்களை, சுத்திசெய்த ஏகாந்தமான இடத்தில், சுத்தமான ஆசனத்திலிட்டு உலர்த்தி எடுத்து, பத்திரப்படுத்தி வைத்துக்கொண்டு, ஒரு வருஷம் வரையிலும் திருவாராதனத்துக்கு உபயோகப் படுத்திக் கொள்ளலாம். "தண்ணந்துழாய்த் தாராயினுந் தழையாயினுந் தண்கொம்ப தாயினுங் கீழ் வேராயினும் நின்ற மண்ணுயினுங் கொண்டு வீசுமின்'' என்ற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியை அறிக.



61. *திருவாராதன மூர்த்திகள் எவை?* 197

சாலிக்கிராமங்களும்; பெருமாள், பிராட்டிமார், ஆண்டாள். ஆழ்வார், எம்பெருமானுர், மணவாள மகா முனிகள் விக்கிரகங்களும்; படங்களும்; திவ்யதேச அபய ஹஸ்தங்களும்; திருவடி நிலைகளும்; தம்தம் ஆசாரியருடைய திருவடி நிலைகளுமாம்.

62. *திருவாராதன மூர்த்திகளை எவ்விடத்தில் எழுந்தருளப் பண்ணல் வேண்டும்?* 198

திருமடைப்பள்ளி, சயன ஸ்தலம் முதலிய இடங்களையொழிந்த; மற்றெருவரும் புகப்பெறுத ஏகாந்தமான தனி யிடத்தில், உயர்ந்த ஆசனத்தின்மேல், கோயிலாழ்வானில் எழுந்தருளப் பண்ணல் வேண்டும்.

63. *திருவாராதனம் எப்படி செய்தல் வேண்டும்?* 199

அது, ஆசாரிய வாயிலாகப் பெறப்படும் பஞ்ச ஸம்ஸ்காரங்களில் ஒன்ருகையினலே, அதிகாரி பேதத்தால் பல வகைப்படும்; சொல்ல முடியாதேனும் தெரிந்தவளவு சுருக்கிச் சொல்லுதும். முன்பு கை கால்களை கழுவிக் கொண்டு ஆசமனம்செய்து பகவச் சந்நிதியில் துவயத்தை அனுசந்தித்துத் தண்டன் சமர்ப்பித்து "நாயகனய் நின்ற'' பாசுரஞ் சேவித்து கதவைத்திறந்து உள்ளே புகுந்து கோயிலாழ்வானுக்குத் தண்டனிட்டு, நின்று 'கௌஸல்யா ஸுப்ரஜா '' என்னும் சுலோகமும் "திருப்பள்ளி யெழுச்சி'' முழுவதும்; அவகாசமில்லாவிடில், முதலும் கடையும் சேவித்து மூன்றுதரம் கையைத் தட்டி திருக்காப்பு நீக்கிப்

பெருமாளுக்கு வலப்புறத்தில் நின்று திருவாலவட்டம் பணிமாறி ஒரு திருத்துழாய் தளத்தைப் பவித்திர விரலில் இடுக்கிக்கொண்டு, திருப்பள்ளி சோதித்து "மாரிமலை முழஞ்சில்" பாசுரஞ் சேவித்து, "அஸ்மதாசார்ய ஸ்வாமி அஸ்தத்தினுல், சமர்ப்பிக்கும், ரத்ன ஸிம்மாசனத்தில், கோயில், திருமலை, பெருமாள் கோயில், திருநாராயண புரம் முதலான திவ்யதேச எம்பெருமான்கள், பெரிய பிராட்டியார், நாய்ச்சிமார், அனந்த கருட விஷ்வக்ஸேனு தியர், ஆண்டாள், ஆழ்வார், எம்பெருமானுர், மணவாள மகாமுநிகள், ஆசாரியர்களனைவரும் எழுந்தருளி அஸ்மத் ஸ்வாமி அஸ்தத்தினுல் சர்வோபசாரங்களுங் கண்டருள" என்று பிரார்த்தித்துத் திருத்துழாய் சமர்ப்பித்து, எழுந் தருளியதாக பாவித்து, கற்பூர நீராஞ்சனம் பணிமாறி "அன்றிவ்வுலக மளந்தாய்" என்னும் பாசுரத்தை அனுசந்தித்து மங்களாசாசனம் செய்தல் வேண்டும்.

64. *திருவாராதன பாத்திரங்களை எப்படி ஸ்தாபித்தல் வேண்டும் ?* 200

சந்நிதிக்கு முன், சுத்திசெய்த ஒரு பாத்திரத்தில் அர்க்ய, பாத்ய, ஆசமன, ஸ்நான, வட்டில்கள் நான்கையும் முறையே நாற்புறத்திலும், சுத்தோதக வட்டிலை நடுவிலும் வைத்து, இப்பால் அர்க்ய பாத்ய ஆசமன ஸ்நான வட்டில் ஒன்றும், சுத்தோதக வட்டில் ஒன்றுமாக இரண்டு வட்டில்களை வைத்து, திருமஞ்சன பாத்திரத்தைப் பெரு மாளுக்கு வலப்புறத்திலும் படிகத்தை இடப்புறத்திலும் வைத்து ஸ்தாபித்தல்வேண்டும்.



65. *திருவாராதன பாத்திரங்களில் எப்படி தீர்த்தம் சேர்த்தல் வேண்டும் ?* 201

திருக்காவேரியென்னும் திருமஞ்சன பாத்திரத்தில் தீர்த்தம் நிறைத்து ; அதில், பச்சைகற்பூரம், குங்குமப்பூ, ஏலக்காய், சந்தனம் முதலிய பரிமள திரவியங்களையும் திருத்துழாயையும் சேர்த்து, வலக்கையினுல் பரிசித்துக் கொண்டு, "ஸ்ரீமதே நாராயணுய நம;" என்னும் உத்தர வாக்கியத்தால் ஐந்து தரம் அபிமந்திரித்து, அந்த தீர்த் தத்தில் ஒரு உத்தரணி தீர்த்தமெடுத்து, சந்நிதிக்கு முன் வைத்த ஐந்துவட்டில்களிலும், இப்பால் வைத்த இரண்டு வட்டில்களிலும் துளி துளி தீர்த்தம் சேர்த்து, உத்தர வாக்கியத்தினுல் சுத்தஞ்செய்து, பின்பு, திருமஞ்சன தீர்த்தத்தை முறையே, அர்க்கிய வட்டில் முதல் ஐந்து வட்டில்களிலும் நிறைத்து ; ஒவ்வொன்றிலும் திருத்துழாய் சேர்த்து முறையே, அர்க்கிய வட்டில் முதல் சுத்தோதக வட்டில் ஈறுன ஐந்து வட்டில்களையும், வலக்கையினுல் மூடி, அவ்வைந்து தரம், உத்தரவாக்கியத்தால் அபிமந் திரித்து ; பாத்ய, ஆசமன, ஸ்நான, சுத்தோதக வட்டில் களில் உத்தரணியினுலே கொஞ்சம் கொஞ்சம் தீர்த்த மெடுத்து அர்க்கியவட்டிலில் சேர்த்து, பின்பு, அர்க்கிய வட்டிலில் ஒரு உத்தரணி தீர்த்தமெடுத்து இடக்கையில் பிடித்து ஒரு துளசி தளத்துடன் வலக்கைத் * தர்ஜனி, அனுமிகை விரல்களால் மூடிக்கொண்டு முகத்துக்கு நேரே புருவங்களினிடையே தூக்கி, "ஸ்ரீ அனந்த ஸரஸீ தோயம் கல்யாண ஸாஸீபய: இதந்து விரஜாதோயம் காவேரீ ஸர்வதோமுகீ, தாம்ரபர்ணிநதீ தீர்த்தம் கலஸே ஆவாஹனம்யது:" என்று அபிமந்திரித்து ; அந்த தீர்த்

* தர்ஜ்ஜனி - ஆள்காட்டி விரல். அனுமிகை - நடு விரல்.

தத்தைத் திருமஞ்சன பாத்திரத்திலும், அர்க்கிய, பாத்ய, ஆசமன, ஸ்நான, சுத்தோதக, வட்டில்களிலும் துளி துளி சேர்த்து, திருவாராதன மூர்த்திகள் மேலும், தத்தம் சிரத்திலும் புரோட்சித்து, எஞ்சிய தீர்த்தத்தைப் படிகத்தில் சேர்த்து விட்டு, இப்பால் வைத்த இரண்டு வட்டில்களிலும் திருமஞ்சன தீர்த்தத்தை நிறைத்து, திருத்துழாய் சேர்த்து வலக்கையால் மூடி (உத்தர வாக்கியத்தால்) அவ்வைந்து தரம் அபிமந்திரித்தல் வேண்டும்.

66. *எவ்வெவருக்கு எவ்வெப்படி திருவாராதனம் சமர்ப்பித்தல் வேண்டும்?* 202

முதலில் தத்தம் ஆசாரியர்களுக்கும், பின்பு அவர் தம் அஸ்தங்களினுலே ஆழ்வார் எம்பெருமானுர் மணவாள மகாமுனி கட்கும்; பின்பு, அனந்த கருட விஷ்வக்ஸே ஞுதியர்க்கும்; அதன் பின்பு, பெருமாள் பிராட்டிமார்க்கு மாக திருவாராதனம் சமர்ப்பித்தல் வேண்டும்.

67. *எவ்வெப் பாத்திர தீர்த்தங் கொண்டு எவ்வெவருக்குச் சமர்ப்பித்தல் வேண்டும்?* 203

சந்நிதிக்கு முன்வைத்த ஐந்து பாத்திரங்களினுடைய தீர்த்தங் கொண்டு; பெருமாள்கள் பிராட்டிமார்க்கும், இப்பால் வைத்த இரண்டு பாத்திரங்களினுடைய தீர்த்தங் கொண்டு; தத்தம் ஆசாரியர் மணவாள மகாமுனிகள் எம்பெருமானுர் ஆழ்வார் நித்திய சூரிகட்கும், திருவாரா தனம் சமர்ப்பித்தல் வேண்டும்.

முற்கூறிய முறையே, ஒருவர் திருவாராதனம் முடிந்து, மற்றொருவர் திருவாராதனம் தொடங்கும்



அவ்வப்பொழுது, இரண்டு வட்டில்களையும் சோதித்து, திருமஞ்சன பாத்திர தீர்த்தத்தை நிறைத்து, துளசி தளங்கள் சேர்த்து. உத்தர வாக்கியத்தால் அவ்வைந்து தரம் அபிமந்திரித்துக்கொள்ளல் வேண்டும்.

68. *பெருமாளுக்கு திருவாராதனம் எப்படி செய்தல் வேண்டும்?* 204

"ஸர்வ மங்கள விக்ரகாய ஸமஸ்த பரிவாராய ஸ்ரீமதே நாராயணுய நம:" என்று அனுசந்தித்து, "அர்க் கியம் கண்டருள" என்று அர்க்ய வட்டிலிலும்; "பாத்யங் கண்டருள" என்று பாத்ய வட்டிலிலும்; "ஆசமனம் கண்டருள" என்று ஆசமன வட்டிலிலும், உத்தரணியால் மும்மூன்றுதரம் தீர்த்தமெடுத்து, முறையே திருக் கைகளையும், திருவடிகளையும், திருப்பவளத்தையும் விளக்கி, அந்த தீர்த்தத்தை ஒவ்வொரு தரமும் படிகத்தில் சேர்த்து விட்டு, இடை யிடையே சுத்தோதக வட்டில் தீர்த்தத்தினுல் உத்தரணியைச் சோதித்துக்கொள்ளல் வேண்டும்.

69. *பின்பு யாது செய்தல் வேண்டும்.* 205

பின்பு திருவொற்றுடை கொண்டு, ஒருதலையால் திருக்கைகளையும் திருப்பவளத்தையும் துடைத்து; மற்றொரு தலையால், திருவடிகளைத்துடைத்து; அர்க்ய வட்டிலில் ஒரு உத்தரணி தீர்த்தமெடுத்துத் திருத்துழா யினுல் திருமுத்து விளக்கி திரு நாவழித்து அந்த தீர்த் தத்தையும் திருத்துழாயையும் படிகத்தில் சேர்த்து, பின்னும் முற்கூறியபடியே அர்க்ய, பாத்ய, ஆசமனங்கள் மும்

மூன்றுதரம் சமர்ப்பித்து தீர்த்தத்தைப் படிகத்தில் சேர்த்து விட்டு முன்போல திருவொற்றுடை சமர்ப்பித்தல் வேண்டும்,

70. திருமஞ்சனம் எப்படி செய்தல் வேண்டும்? 206

பின்பு "ஸ்நானுசனத்தில் எழுந்தருள" என்று பிரார்த்தித்து திருத்துழாய் சமர்ப்பித்து, எழுந்தருளினதாக பாவித்து "திருமஞ்சனங் கண்டருள," என்று "வெண்ணெ யளைந்த" பதிகமேனும். முதலுங் கடையுமேனும் "முன் பொலா" "மாயமான்" "காடுகளுடுபோய்" "திண்ணூர் வெண் சங்குடையாய்" பாசுரங்களும், சேவித்துக் கொண்டே திரு மஞ்சனஞ் செய்து திரு வொற்றுடை சமர்ப்பித்தல் வேண்டும்.

அவகாச மில்லாவிடில் "தைலாப்யங்ஙனம் கண் டருள" என்றும் "பஞ்சாம்ருத ஸ்னனம் கண்டருள" என்றும் ஸ்னனவட்டிலில் உத்தரணியால் மும் மூன்று தரம் தீர்த்தமெடுதது சமர்ப்பித்து தீர்த்தத்தைப் படிகத்தில் சேர்தது, "சுத்தோதக ஸ்நானம் கண்டருள" என்று உத்தரணியினல், சுத்தோதக வட்டிலில் மூன்றுதரம் தீர்த்த மெடுத்து சமாப்பித்துப் படிகத்தில் சேர்த்து முன்போல திருவொற்றுடை சமர்ப்பித்து, "பரிவதிலீசனே" பாசுரத் தால தூபமும், "வையந்தகளியா" "அன்பேதகளியா "திருக்கண்டேன்" பாசுரங்களால் தீபமும் சமர்ப்பித்து, முறையே, அர்க்கிய பாத்ய ஆசமன வட்டில்களில், மும் மூன்றுதரம் உத்தரணியால் தீர்த்தமெடுத்து திருக்கைகள் திருவடிகள். திருப்பவளத்தை விளக்கி, திருவொற்றுடை சமாப்பித்தல் வேண்டும்.



71. திருமஞ்சனம் செய்த பின்பு யாது செய்தல் வேண்டும்? 207

"திருப்பரிவட்டம் கண்டருள" என்று திருப்பரி வட்டம் சமர்ப்பித்து "அலங்காராசனம் கண்டருள" என்று திருத்துழாய் சமர்ப்பித்து "துவாதசோர்த்துவ புண்டரம் கண்டருள" "யஜ்ஞோபவீதம் கண்டருள" திருப்பவித்ரம் கண்டருள" "திருவாபரணங்கள் கண்டருள" என்று ஒவ்வொருதரமும் திருத்துழாய் சமர்ப்பித்து "நாறிய சாந் தம்" பாசுரத்தால், சந்தனமும், "ஆநிரை மேய்க்க" பதிகத்தாலேனும், முதலும் கடையுமான பாசுரங்களா லேனும் திருத்துழாயும் புஷ்பங்களும் சமர்ப்பித்து, "புகை யால் விளக்கால்" பாசுரத்தால் தூபமும், "பல்லாண்டு அடியோமோடும்" பாசுரங்களால் தீபமும் சமர்ப்பித்து, "தூபானந்தரம் ஆசமனங் கண்டருள, தீபானந்தரம் ஆசமனங் கண்டருள" என்று ஆசமன வட்டிலில் இரண்டுதரம் உத்தரணியால் தீர்த்த மெடுத்து சமர்ப் பித்துப் படிகத்தில் சேர்த்து திருவொற்றுடை சமர்ப்பித்து, மந்த்ர புஷ்பம் சமர்ப்பித்து, "சென்றால் குடையாம்" பாசுரம் சேவித்தல் வேண்டும்;

72. திருப்போனகம் எப்படி கண்டருளப் பண்ணல் வேண்டும்? 208

"போஜ்யாசனம் கண்டருள" என்று திருத்துழாய் சமர்ப்பித்துத் திருமுன்பே ஸ்தல சுத்திசெய்து திருப்போன கத்தைச் சமர்ப்பித்து, அர்க்கிய வட்டிலில், உத்தரணி யினலே தீர்த்தமெடுத்துத் திருப்போனகத்தில் "உத்தர வாக்கியத்தை" அனுசந்தித்து புரோட்சித்து வலக்கை யினல் பரிசித்து, "துவயத்தால்" அபிமந்திரித்து,

பெருமாள்களுக்கு ஒரு கூறும். பிராட்டிமார்க்கு ஒரு கூறுமாக பாவித்து, உத்தரணியால், அர்க்ய வட்டிலில தீர்த்த மெடுத்து இடக்கையில் வைத்துக்கொண்டு, "அஸ்மத் ஸ்வாமி அஸ்தத்தினால் திருப்போனகம் கண்டருள" என்று "நாறுநறும் பொழில்" "இன்று வந்தித்தனை" "கூடாரைவெல்லும்" பாசுரங்களைச் சேவித்துக்கொண்டே வலக்கையினாலே திருப்போனகத்தை கண்டருளப் பண்ணி தீர்த்தத்தைப் படிகத்தில் சேர்த்து, சுத்தோதக வட்டில் தீாத்தத்தினால் உத்தரணியைச்சோதித்து, "பானீயம் கண்டருளப்பண்ணி" முறையே அர்க்ய, பாத்ய, ஆசமனங்கள் சமர்ப்பித்து, திருவொற்றாடை சமர்ப்பித்தல் வேண்டும்.

73. *விஷ்வக்ஸேனாதி நித்திய சூரிகளுக்கும், ஆழ்வாராசாரியர்கட்கும் பிரசாதம் எப்படி கண்டருளப் பண்ணல் வேண்டும்?* 209

பெருமாள்களுக்கும் .பிராட்டிமார்க்கும் கண்டருளப் பண்ணிய பிரசாதத்தை முன்பு விஷ்வக்ஸேனர் முதலான நித்தியர்களுக்கும், பின்பு, ஆழ்வார் எம்பெருமானார் மணவாள மகாமுநிகளுக்கும், அதன் பின்பு தத்தம் ஆசாரியர்க்கும் முற் கூறியபடி பானீயத்தோடே கண்டருளப்பண்ணி, அர்க்கிய பாத்ய, ஆசமனங்கள் சமர்ப்பித்துத் திருவொற்றாடை சமர்ப்பித்தல் வேண்டும்.

74. *அடைக்காய் எப்படி கண்டருளப் பண்ணல் வேண்டும்?* 210

"பர்யங்காசனம் கண்டருள" என்று திருத்துழாய் சமர்ப்பித்து "போய்ப்பாடுடைய" பாசுரத்தால், அடைக்காய் கண்டருளப்பண்ணி, அர்க்ய பாத்ய ஆசமனங்கள் சமர்ப்பித்துத் திருவொற்றாடை சமர்ப்பித்தல் வேண்டும்.



75. **சாற்றுமுறை எப்படி செய்தல் வேண்டும்?* 211

திருவாலவட்டம் சமர்ப்பித்து கற்பூர நீராஞ்சனம் பணிமாறி "சிற்றஞ் சிறுகாலே" "வங்கக்கடல்" "பல்லாண்டு, அடியோமோடும்" பாசுரங்கள் சேவித்து திருத்துழாய் சமர்ப்பித்து "ஸர்வதேச" தொடங்கி "மணவாள மாமுநியே இன்னமொரு நூற்றாண்டிரும்"வரை சேவித்துச் சாற்றுமுறை செய்து "எனைப்போல் பிழை செய்வார்" "உபசாராபதேசேன" "அமர்யாத" முதலியவற்றை அனுசந்தித்து அபராத க்ஷாமணம் பண்ணிக்கொண்டு, தண்டன் சமர்ப்பித்து, திருப்படிக தீர்த்தத்தை உத்தரணியாலெடுத்து மூன்றுதரம் வலக்கையில் சேர்த்து உட்கொண்டு, ஸ்ரீபாத தீர்த்தத்தை இரண்டுதரம் சுவீகரித்துத் தண்டன் சமர்ப்பித்து, திருவாலவட்டம் சமர்ப்பித்து திருக்காப்பு சேர்த்தல் வேண்டும்.

## போஜனம்.

76. *போஜனத்துக்கு உரிய இலைகள் எவை?* 212

வாழையிலை, பலாவிலை, மாவிலை, புரசையிலை, புன்னையிலை, மந்தாரையிலை முதலிய வைகளாம்.

77. *இலையை எப்படி போடல் வேண்டும்?* 213

கோமயத்தாலே மெழுக்கிட்டுச் சுத்தி செய்த தலத்தில் ஜலத்தினாலே, சதுரசிரமாக சுத்திசெய்து அதன்

* சாற்றுமறை யென்றும் சொல்வதுண்டு.